உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் திருவுருவம்

ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 4 வைகாசி பகுதி 8

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் வாரணுசி [காசி] விஜயம்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இருபதாவது அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பரிபூரணம் எய்திய 10 ஆம் ஆண்டு நினைவு மகேஸ்வர பூஜைத் திருநாளை, வரும் 28-5-82 அன்று வாரணுசியில் தமக்குச் சொந்தமான ஸ்ரீகுமார சுவாமி திருமடத்தில் நிகழ்த்த ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் திருவுளம் பற்றி வாரணுசிக்கு எழுந்தருளுகிறார்கள்.

ஸ்ரீ காசிமடம் ஸ்தாபகரும் அருட்பெருங் கவிஞருமாகிய ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் 294-ஆவது ஆண்டு நினைவு மகேஸ்வர பூஜைத் திருநாள் 9-6-82 அன்று வருகிறது. அதனைத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தில்நிகழ்த்தத் திருவுளம் பற்றியுள்ளார்கள். பல ஊர்களிலும் அந்நாளில் நிகழ உள்ள அறச்செயல் நிகழ்ச்சிகள் பற்றிய விவரங்கள்உள்ளே.

அருள் பழுத்த கனிச்சுவைப் பகுதியில் வேதம் பற்றி அனைவரும் அறியத் தக்க பல கருத்துக்களையும் சமயப்பேழையுள் கடவுள் அடங்குவாரு என்ற வினுவுக்கு விடையும் இன்னபிற செய்திகளையும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் நாமுய்ய அருளியுள்ளார்கள்.

மற்றும் திரு. கி. வா. ஜ. அவர்களின் மூவரில் ஒருவனு? என்ற கட்டுரையின் பகுதியும், மகா வித்துவான் திரு, தண்டபாணி தேசிகர் அவர்களின் பெரியோர்கள் வாக்கு என்ற வாழ்வு நெறிக் கட்டுரையும், திரு. கோ. வன்மீகநாதன் அவர்களின் 'சர்ச்சிலின் அநுபவம்' என்ற கட்டுரைத் தொடரின் முதற் கட்டுரையும் மற்றும் வழக்கமான அம்சங்களும் இந்த இதழுக்கு அணி செய்கின்றன;

- நி. ஆ-ர்

## ஆலய பூஜைப் படிக்காசு நிதிக்கு

### நன்கொடை அளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 3—4—82 வரை கூடுதல் | 13996—10 |
| 1. | திரு. S. R. வெங்கட்ராம், அடையார், சென்னை | 5—00 |
| 2. | திரு. தா. ம. வெள்ளைவாரணம், திருப்பனந்தாள் | 10—00 |
| 3. | துர்க்கா குடில் திரு. அப்பு, குடந்தை | 5—00 |
| 4. | திரு. S. ராசகோபாலன், மன்னார்குடி | 3—00 |
| | 2—5—82 வரை கூடுதல்— | 14019—10 |

பூங்கொன்றைக் கண்ணியான்பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடத்து அதிபர்
**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**



பண்டார மும்மணிக்கோவையின் இருபதாம் பாடல் நேரிசை ஆசிரியப் பாவால் ஆனது.நாற்பத்தேழு அடிகளைக் கொண்டது. இந்நூலில் உள்ள பாடல்களில் அதிக அடிகளைக் கொண்ட பாடல் இதுவே ஆகும்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்கள் இத்திருப் பாடலில் தம் குருநாதரை ஒன்பது விளிகளால் விளித்து 'எனக்கு உடனடியாக அருள்செய்ய வேண்டும்' என்று ஒரு அவசரக் கோரிக்கையை விடுக்கிறார். அது எந்த வகையான அருள் என்பதிலே ஓர் அற்புதம் இருக்கிறது. என்றைக்கும் புதுமையான தன்மை இருக்கிறது.

'எல்லாச் சமயத்தவர்களும் பரம்பொருளைத் தாம் தாம் செய்த பேழைக்குள் அடைத்து விடுகிறார்கள். சமயப் பேழைக்குள் அடைபடாத தனிப் பரம்பொருளை நான்

ஆராய்ந்தறிய வேண்டும். அதற்கு நீ உடனே அருள்செய்ய வேண்டும்' என்று ஸ்ரீ சுவாமிகள் தம்குருநாதரிடம் வேண்டு கிருர்.

இந்தவேண்டுகோளின் அவசிய அவசரத்தைப் பின்னர் ஆராய்வோம். இந்த வேண்டுகோளே வைப்பதற்கு முன்னே ஒன்பது முறை ஒன்பது கோணங்களில் ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை விளிக்கிருர் அவற்றின் விளக்கங்களே இனிக் காண்போம்:

1. நான்மறைக் கிழவ: இருக்கு, யசுர், சாமம், அதர் வணம் என்பன நான்கு வேதங்கள். அவை ஒருவரால் செய்யப் பெற்றன அல்ல; ஒருகாலத்தில் செய்யப்பெற்றன அல்ல. அவற்றிற்கு மூலம் பிரணவம். நான்குவேதங்களும்ஒரு மொழியில் இருந்தாலும் அவை ஒரு மொழிக்கே சொந்த மானவை அல்ல; ஒரு இனத்துக்கே சொந்தமானவை அல்ல; ஒரு சமயத்துக்கே சொந்தமானவை என்று கூடச் சொல்ல முடியாது. அவற்றின் பூரண உரிமை பரம்பொருளுக்கு மட்டும் என்பதுதான் சத்தியம்.

கிழவன் என்ற சொல்லுக்குக் கிழமை உடையவன். அதாவது உரிமை உள்ளவன் என்பது பொருள். 'என் குரு நாதரே! நீ வேறு; பரம்பொருள் வேறு இல்லே' என்று குறிப் பிடுவதையே 'நான்மறைக்கிழவ' என விளக்கிச் சொல்கிருர். சமயம் தீர்ந்த தனிப்பொருளேக் காட்டு எனப் பின்னே கேட்பது உன்னே எனக்குக்காட்டு என்பதாகிறது.

2. நல் தவ முதல்வ; தவசிகளுக்கு நீ முதல்வன்என்று சொன்னுல் அது ஒரு பதவி போல ஆகும். 'நீ தவத்துக் கெல்லாம் முதல்வன்'. ஆகத்தவம் என்ற செயலின் வடிவமே நீ தான்; அதன் முதன்மையும் நீதான் என்கிருர். பின்னே வரும் வேண்டுகோளாகிய சமயம் தீர்ந்த தனிப்பொருளேக் காட்டுதல் தவமுதன்மைக்கே ஆகும் என்பது குறிப்பு.

3. நூன் முறை பயின்ற நுண்மை சால் அறிஞ; ஓதி உணர்ந்தவர்கள் அறிஞர்கள் ஓதாது உணர்ந்தவர்கள் ஞானிகள்; அறிஞர்கள். பின்னர்த்தவமுயற்சியால் கண்டறியாதன கண்டும், 'தேடித் தேடொணுதவற்றைத் தேடிக் கண்டு கொண்டும்,ஞானியாவதுண்டு. ஞானி அறிஞராகவும் ஆனமைக்கு ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்களே உதாரணம் ஆவார்கள். அவர்கள் தம் குருநாதரும் அவ்வாறே என்றருளுவது ஒரு சுவையான வரலாற்று உண்மையாகும். ஞானியான ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்கள் பயிலத்தக்க நூல்களே, இன்ன நூலின் பின் இன்னநூல் பயில வேண்டும் என்னும் முறைமை பிறழாமல் கற்ற நல்லறிஞர் என்பது இவ்விளியால் நாம் அறியத்தகுவது. பயின்ற'என்றகடந்த காலச்சொல்லிஞலேயே'கற்ருேர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையராக' முற்றக்கற்ருர் என்பது புலஞகிறது.

சமயம் தீர்ந்த தனிப்பொருள் தெரிதல் (ஆய்தல்) பின்னே வேண்டப் பெறுவதஞல் அந்த ஆய்வுக்கு வழி செய்து அருள் செய்வதற்கு நூல் முறைபயின்ற நுண்மை சால் அறிவுடையரே ஏற்றவர். அவ்வகை நிலைமையும் 'தேவரீர்!தங்களிடம் உள்ளது'என்று பணிவுடன் விண்ணப்பித்துக் கொள்கிருர்கள்.

"நான் மறைக் கிழவ! நற்றவ முதல்வ!
நூல்முறை பயின்ற நுண்மைசால் அறிஞ!

— சிவ சிவ

## வின்ஸ்டன் சர்ச்சிலின்
## ஒரு அநுபவமும் ஒரு கூற்றும்
### கோ. வன்மீகநாதன்.

இந்நூற்றுண்டில், சிறப்பாக இரண்டாம் உலக மாபெரும் போர்க் காலத்தில் வாழ்ந்தவர்கள், 15வயதினராக 1940 இல் இருந்த வராயினும் வின்ஸ்டன் சர்ச்சிலே அறியாதார் இருக்கமாட்டார். இங்கிலாந்தைக் காக்கப்பிறந்த மாபெரும் பேராண்மைமிக்க புருஷர். அந்தப் போர் நிகழ்ந்த காலத்தில் அவர் மட்டும் இறைவனின் திருவுள்ளச் சித்தத்தால் முதன் மந்திரியாயிருந்தில்லாவிட்டால் இங்கிலாந்து ஜெருமானியருக்கு அடிமையாகியிருக்கும்.

அவருக்கு ஒரு சமயம் நிகழ்ந்த அனுபவம் இது. அவர் குதிரைப் படையில் சேர்ந்திருந்தார். அப்படை இந்தியாவுக்கு அனுப்பபட்டது. பம்பாயில் துறைமுகத்தில் இறங்க இன்றுள்ள வசதிகள் அன்றில்லே. அவர் வீற்றிருந்த படகு தண்ணீரில் ஆழ்ந்தும் எழுந்தும் ஆடிக்கொண்டிருக்கும்போது, துறைமுகத்தின் சுவரில் பதிக்கப்பட்டிருந்த இரும்புக் கைப்பிடிகளைப் பற்றிக்கொண்டு கரையேற வேண்டும். இவர் அப்படி ஏறும் போது ஒரு கைப்பிசகிவிட்டு தோள் எலும்பு மூட்டிலிருந்து கழன்று. விட்டது எத்தனையோ மருத்துவம் செய்தும் அத்தோள் வலுவடையவில்லே. எதிர்பாராத நேரத்தில் திடீரென மூட்டு கழன்று விடும்.

ஆனல் இக்காரணத்தைக் காட்டி இவர் குதிரைப்படையை விட்டு நீங்கவில்லே. அக்காலத்தில் குதிரைப்படை வீரர்கள் வாளினுலேயே போர் புரிந்து வந்தார்கள். ஒரு நாள் இவரை ஒரு எதிரி தாக்கினுன் இவரோ நம்பிக்கையுடன் வாட்போர் செய்யத் துணிபவில்லே. கையிலிருந்த மாசர் ரைபிள் என்ற துப்பாக்கியால் எதிரியைச் சுட்டு வீழ்த்தி உயிர் பிழைத்தார் இந்நிகழ்ச்சியை ''என் இளமை நாட்கள்'' என்ற நூலில் கூறும்போது தன் தோளின் மூட்டை நழுவவைத்த இறைவனின் பேரருளே நினைந்து இறைவனைப் போற்றுகிறுர். உலகமக்கள் தாம் நம்ப விரும்பாத நிகழ்ச்சிகளே இது தற்செயலாக நிகழ்ந்தது என்று கூறியோ அல்லது கோயின்சிடன்ஸ், அதாவது காக்காய் உட்கார்ந்து, பனம்பழம் விழுந்தது என்று

கூறிப் புறக்கணிக்கின்றுர்கள் பலர்: இறைவனின் திருவருள் என்று எண்ண அஞ்சுகிருர்கள். அத்தகைய பேராண்மையில்லே. இதையொட்டி 1821இல் இலக்கியத்திற்காக நோபெல் பரிசைப் பெற்ற அன்டோல் பிரான்ஸ் என்னும் பிரஞ்சுக்காரர் கூறுகிருர், ''சான்ஸ்'' அதாவது

''தற்செயல்''
என்னும் சொல் கடவுள் தன் உண்மைப்
பெயரை வெளியிடவிரும்பாத சமயங்களில்
பயன்படுத்தும் புனைபெயராக
இருக்கலாம்'' என்கிருர். (வளரும்)

# ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

## 294 - ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

துந்துபி ஆண்டு வைகாசித் திங்கள் 26- ம் நாள்

(9—6—82) புதன்கிழமை



## ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாறு



ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் ஸ்ரீ வைகுண்டத்தில் அவதரித்தார்; திருச்செந்தூர் முருகப்பெருமான் அருளால் ஐந்தாவது ஆண்டில் ஊமை நீங்கிக் 'கந்தர்கலி வெண்பா'ப் பாடி அருள் பெற்றார். மதுரை மீனாட்சி அம்மைமீது 'பிள்ளைத் தமிழ்' பாடி அம்மையால் முத்தாரம் அணியப் பெற்றார். திருமலைநாயக்க மன்னன் விருப்பத்திற்கிணங்க 'நீதிநெறி விளக்கம்' என்னும் நூலை அருளினார். தருமை ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை வழிபட்டு அவரை ஞான குருவாகக்கொண்டு 'பண்டார மும்மணிக்கோவை' பகர்ந்தார். ஆரூர், வேளூர், தில்லை தரிசித்துத் 'திருவாரூர் நான்மணிமாலை முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, முதலியன பாடினார்; காசி சென்று 'சகலகலாவல்லி மாலை' 'காசிக்கலம்பகம்' முதலியன அருளினார். சிங்கத்தின் மீதேறிச் சென்று முகலாய மன்னனைக் கண்டு அம் மன்னன் உதவியால் கேதார மந்திரம், கேதாரத்துறை, அறச்சாலை முதலியன அமைத்தார்; வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முதலியோருக்கு வித்யா குருவாகத் திகழ்ந்தார். செயற்கரிய செயல்கள் பலபுரிந்த குமரகுருபர முனிவர் பெருமானின் நினைவு உலகுக்குச் சிவநெறி காட்டி இன்பம் பயக்கும்.

உ

சிவ சிவ

திருப்பனந்தாளில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

**294 - ஆம் ஆண்டு**

# மகேசுவர பூஜைத் திருநாள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**

அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் நடைபெறுவது

துந்துபி ஆண்டு வைகாசித் திங்கள் 26-ஆம் நாள் (9—6—82) புதன்கிழமை முற்பகல் மணி 9 முதல் 10-30 வரையிலும், பிற்பகல் மணி 4 முதல் 7 மணி வரையிலும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுக் கருத்தரங்கு நடைபெறும்.

முற்பகல் நிகழ்ச்சி

தலைவர் :

திரு. **கம்பன் அடிப்பொடி அவர்கள்**

பொதுப்பொருள்:— காசிக் கலம்பகம்

மகாவித்துவான் திரு. ச. **தண்டபாணி தேசிகர் அவர்கள்**

— தலச்சிறப்புக்கள்

திரு. மு. **அருணாசலம் M. A.,** அவர்கள்

— சமயம்

பிற்பகல் நிகழ்ச்சி

தலைவர் :

பேராசிரியர். திரு. அ. ச. **ஞானசம்பந்தன் M. A.,** அவர்கள்

பொதுப்பொருள்:— காசிக் கலம்பகம்

வாகீச கலாநிதி திரு. கி. வா. **ஜகந்நாதன் M. A.,** அவர்கள்

— இலக்கியச் சிறப்பு

திரு. **கே. எம். வேங்கடராமையா M. A., B. O. L.,** அவர்கள்

— மெய்ப்ப டுகள்

நண்பகலில் பூஜையும், மகேசுவர பூஜையும் நடைபெறும்.

அன்பர்கள் வந்து திருவருள் பெறுவாராகுக.

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
1—5—82

ஆணைப்படி,
**முத்து. மெய்கண்டதேவன்,**
மானேசர்.

1982ம் — வருடம்

## ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு.

கீழ்க்கண்ட இடங்களுக்குத் தொகை அனுப்பப்பட்டுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| வாரணுசி | 500 | உத்தரகோசமங்கை | 140 |
| ஷி பண்டாரா | 700 | திருவாடானை | 200 |
| பிரயாகை | 350 | பழனி | 285 |
| ஹரித்துவார் | 400 | திருப்பெருந்துறை | 140 |
| ரிஷிகேசம் | 400 | ஆக்கூர் | 145 |
| திருக்கேதாரம் | 400 | மாயூரம் | 285 |
| இராமேஸ்வரம் | 500 | வைத்தீஸ்வரன்கோவில் | 200 |
| ஸ்ரீவைகுண்டம் | 360 | சீர்காழி | 140 |
| திருச்செந்தூர் | 140 | ஆச்சாள்புரம் | 300 |
| திருநெல்வேலி | 140 | திருப்பத்தூர் | 200 |
| பழைய பாபநாசம் | 140 | பேரூர் | 220 |
| திருக்குற்றாலம் | 300 | விராலிமலை | 140 |
| காஞ்சிபுரம் | 200 | திருவானைக்கா | 200 |
| திருக்கழுக்குன்றம் | 200 | அவிநாசி | 250 |
| திருக்கச்சூர் | 175 | திருப்பாண்டிக்கொடுமுடி | 250 |
| திருவொற்றியூர் | 140 | பவானி | 200 |
| திருத்தணி | 200 | திருவையாறு | 250 |
| காளஹஸ்தி | 200 | சுவாமிமலை | 200 |
| காவிரிப்பூம்பட்டினம் | 140 | கும்பகோணம் | 350 |
| திருவெண்காடு | 225 | திருவிசநல்லூர் | 200 |
| திருக்கடவூர் | 200 | கஞ்சனூர் | 200 |
| வேதாரண்யம் | 140 | திருவிடைமருதூர் | 140 |
| திருப்புகலூர் | 400 | திருவண்ணாமலை | 500 |
| திருவாரூர் | 200 | திருமாகறல் | 250 |
| நாகப்பட்டினம் | 250 | சென்னை | 150 |
| திருநள்ளாறு | 140 | வடதிருவாலங்காடு | 140 |
| காரைக்கால் | 175 | உத்திரசுவாமிமலை (டெல்லி) | 140 |
| திருவீழிமிழலை | 150 | திருப்பாதிரிப்புலியூர் | 200 |
| மதுரை | 500 | விருத்தாசலம் | 300 |
| திருப்பரங்குன்றம் | 200 | திருக்கோவலூர் | 140 |
| சிதம்பரம் | 200 | ஆஸ்ராமம் | 200 |
| ஷி தில்லைவாழந்தணர் | 450 | ஈங்கோய்மலை | 200 |
| கன்னியாகுமரி | 200 | திருப்பனந்தாள் | 5000 |

10-6-82வ. வாரணுசி ஸ்ரீகுமாரசுவாமிமடத்தில் சாதுக்கள் பண்டாரா.

உ

சிவ சிவ

# தில்லையில் பெரியபுராணச் சொற்பொழிவுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம்

தில்லைத் தமிழ் மன்றத்தினரால் நடத்தப் பெறுவது

நிகழும் துந்துபி ஆண்டு வைகாசித்திங்கள் 10 ஆம்நாள் முதல் 17 ஆம் நாள் முடிய (25—5—82 முதல் 31—5—82 முடிய) தில்லையில் பெரிய புராணச் சொற்பொழிவுகள் நிகழ்ச்சி நிரலிற் காணும் வண்ணம்,

சிதம்பரம் கனகசபை நகர் தருமையாதீனத் திருமடத்தில்

நாடோறும் இரவு 7-மணி முதல் 9-மணி வரை நிகழும்.

விரிவுரை நிகழ்த்துவோர்:

**ஆங்கீஸ திரு. S. வெங்கடேச சர்மா அவர்கள்**

அன்பர்கள் கேட்டு இன்புறுவார்களாக.

கனகசபைநகர்
சிதம்பரம்
10—5—82

ஆணைப்படி,
S. திருநாவுக்கரசு,
தில்லைத் தமிழ் மன்றம்,

உ

திருச்செந்திலாண்டவன் துணை

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

294-ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

---

## ஸ்ரீ வைகுண்டத்தில்

# இன்னிசைத் திருமுறை விழா

## 9—6—82

ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

ஸ்ரீலஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் அவதரித்த ஸ்ரீ வைகுண்டத்தில் அன்னாரின் மகேஸ்வர பூசைத் திருநாளாகிய 9—6—82 புதன்கிழமை மாலை 6 மணிக்குத் தொடங்கி இரவு முழுவதும் திருவீதிவலம் வந்து ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் திருக்கோயிலில் நிறைவு செய்யப் பெறும்.

திருமுறைவாணர்கள்:

1. தேவார இசைமணி,
   திரு. T. A. திருஞானசம்பந்தன் — மதுரை.
2. இசைமணி,
   திரு. அரு. திருஞானசம்பந்தன்
   திருமுறைப்பணி அருள்மிகு. மீனாட்சிசுந்தரேசுவரர் கோயில்,
   மதுரை.
3. திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை,
   திருமுறைப்பணி, குற்றாலநாதர் திருக்கோயில்,
   திருக்குற்றாலம்.
4. திரு. தம்பையா ஓதுவார்,
   திருமுறைப்பணி சுசீந்திரம்.
5. திரு. P. சுப்பிரமணிய பிள்ளை,
   தன்னுமை, திருப்பரங்குன்றம்.
6. திரு. முத்தையா பாகவதர்,
   பிடில், திருப்பரங்குன்றம்.

உ
சிவ சிவ

# ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

294 ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

## மதுரையில் இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

துந்துபி ஆண்டு வைகாசி மாதம் 26ம் நாள் (9—6—82) புதன்கிழமை மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோயில் விநாயகர் சந்நிதியில் இரவு 8மணிக்குத்தொடங்கிச் சிவப்பெருக்கும் பிள்ளையார் தங்கியருளிய ஆவணிமூல நான்கு வீதிகளில் இரவு முழுவதும் திருமுறைவ ணர்கள் திருமுறையோதி, காலை 6-மணிக்கு ஸ்ரீ மீனாட்சியம்மை சன்னதியில் பூர்த்தி செய்வார்கள்.

திருமுறைவாணர்கள்:—

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

1. திரு. T. M. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள்,
திருவாவடுதுறை.
2. தேவாரமணி திரு. S. சயிலப்ப ஓதுவார்,
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், மதுரை.
3. தேவார இசைமணி திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சி.
4. விருத்தாசலம் திரு. ப. ராமச்சந்திரன்
திருநெறிய தமிழ்மணி
5. திரு. த. குருசாமி தேசிகர், மதுரை.
6. திரு. S. A. கோபாலன் – வேய்ங்குழல், சிதம்பரம்.
7. திரு. S. L. சாமி - பிடில், திருச்சி.
8. திரு. கோ. வெங்கட்ராமன் - மிருதங்கம் திருப்பனந்தாள்

ஆணைப்படி,

ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள்.
10—5—82

முத்து. மெய்கண்டதேவன்,
மானேஜர்.

உ

சொக்கலிங்கம் துணை

# திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பிகள் நினைவு திருமுறைத் திருவிழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

துந்துபி ஆண்டு வைகாசித்திங்கள் 12-ஆம் நாள் 26—5—82 புதன்கிழமை இரவு 8-மணிக்குத் தொடங்கும்.

திருமுறைவாணர்கள்:

திருமுறைக் கலாநிதி

திரு. M. சுப்பிரமணிய முதலியார், திருவாரூர்.

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

திரு. T. M விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள்
திருவாவடுதுறை.

திரு. குப்புசாமி குருக்கள்
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருநாரையூர்:

தேவார இசைமணி திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்.
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சி.

தேவார இசைமணி திரு. பா. இராமச்சந்திரன்,
திருமுறைப்பணி விருத்தாசலம்:

இன்னிசைமாமணி

திரு சா. திருஞானசம்பந்தன், சீர்காழி.

திரு. க. சொக்கலிங்கம், வைத்தீசுவரன்கோவில்.

திரு S கல்யாணசுந்தர தேசிகர், கும்பகோணம்.

திரு. தி. சுப்பையா தேசிகர், திருக்களர்.

திரு. குருநாத சர்மா — வயலின், சிதம்பரம்.

திரு. கோ. வெங்கட்ராமன்-மிருதங்கம், திருப்பனந்தாள்

திரு. S. A. கோபாலன், - வேய்ங்குழல், சிதம்பரம்.

*Sri Kasi Mutt*
*Religious Charities*
*Tirupanandal*

உத்திரவுப்படி
*R. V. SUBRAMANIAM*
*Manager.*

---

குறிப்பு; திருநாரையூரில ஒரு ஓதுவார் நியமிக்கப்பெற்று நாடோறும் திருமுறைப் பாராயணம் நடைபெற்று வருகிறது. 27-5-82 சேக்கிழார் சுவாமிகள் நினைவு நாளில் குன்றத்தூரிலும் தஞ்சை மாவட்டம் திருநாகேஸ்வரத்திலும் நண்பகலில் அன்னம் பாலிப்பு நடைபெறும.

# ஸ்ரீ ஏகாம்பரநாதர் பதிற்றுப்பத்தந்தாதி

கூடலார்புரம் நொடிவரை இடிதரக் குறுநகை கொளுவானைப்
பாட லார்மறை யொலிவளர் கச்சியம் பதியின்மா நிழலானை
ஊட லார்மன வலியழல் விழுதெல உருக்கிடு மொளியானைத்
தேட லார்மய லெனுமளற் றழுந்துபு சிவகதி சேராரே. 22

சேரர் கோவினுக் கனுதின மொளிவளர் சிலம்பொலி தருவானைப்
வீரர் கோவினை யார்வுறும் வீரனை வியர்வினு லளித்தானை
சூரர் கோவடி வேலுடைக் கடவுளாற் சூர்முதற் றடிந்தேவான்
ஊரர் கோவிலுக் கருள்தருங் கச்சியே கப்பனை உரையீரே. 23

உரைம லிந்திடு மறைமுதற் கலைகளால் உறுபொறி புலன்தம்மால்
வரைம லிந்திடும் வனத்தினிற் புரிதரு மாதவ நெறிதன்னுல்
விரைம லிந்திடு பூம்பொழிற் கச்சியுள்விழைவொடு நினையாதார்க்(கு)
அரைம லிந்திடு புலியத ளுடையவன் அடைந்திடற் கரியானே. 24

அரிய நூல்களைக் கற்பினு மறிவினுல் அறிவகை அறிந்தாலும்
உரிய காரிய முத்தியிற் கலப்புறும் உபாயமும் பெறலாமோ
பெரிய ரோடுபன் னுட்களும் பழகியே பெருங்குரு வுபதேசம்
தெரிய ஓதிடில் உயர்திரு வேகம்பந் தெரிசனப் படலாமே. 25

படவ ராவணி வேணியான் திருக்கச்சிப் பதியினிற் பரமேட்டி
இடது பாகத்தாள் தழுவமெய் குழைந்திடும் இறைவனை ஏத்தாதே
தடமென் மாமுலைதீப் பரத்தையர் மயலினிற் களித்தனை மடநெஞ்சே
நடலை காண்டிநீ நடுவனும் வந்தனன் நல்வழி உனக்கின்றே. 26

உன்னை நீயுண ராயுனைத் தொடர்ந்திடும் ஊழ்வினை தனைஓராய்
மின்னை நேர்சடைத் திருக்கச்சி மாநகர் வீற்றிருந் தருள்பெம்மான்
தன்னை ஓர்கிலை யெப்படிப் பிழைப்பது தமியனுங் கெடுவேனுல்
அன்னை போலுனை நம்பினேன் நெஞ்சமே யாரெனைக் காப்பாரே. 27

காக்கு நாயகன் கச்சியெம் பெருந்தகை அன்பரைக் கடைக்கண்ணுல்
நோக்கு நாயகன் நுண்ணிதின் நுண்ணியன்நொடியினி லுவகொல்லாம்
ஆக்கு நாயகன் அவனலா துயிர்த்துணை யாருளர் கூறுங்காற்
தூக்கு சீர்த்திருத் தொண்டரும் பணிந்திடு தூய்மையன் அவனுமே.

# மூவரில் ஒருவனு?

கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமானை மும்மூர்த்தி களில் ஒருவனுக வைத்து பிரமா, விஷ்ணு, சிவன் என்று எண்ணு வது ஒருவழக்கு, வேதத்தில் சில இடங்களில் அவ்வாறு வருகிறது. பிரம, விஷ்ணு, ருத்திரர்கள் என்ற மூன்று மூர்த்திகளுக்கும் மேலா னவன் என்ருலும் மயங்கும்படி அவனை மூவரில் ஒருவராக வைத்து எண்ணுவது பிழை என்ற கருத்தைச் சொல்ல வருகிருர் குமரகுருபரர். முதலில் அப் பெருமான் திருவுருவத்தை எண்ணி விளிக்கிருர். அவனுடைய திருமுடியையும், திருமார் பையும், திருத்தோள்களையும் வருணிக்கிருர்.

## படர்சடைக் கடவுள்

அவனுடைய திருமுடியில் பிறைச் சந்திரனும், பாம்பும், கங்கையும் உள்ளன. சந்திரனுக்கும் பாம்புக் கும் பகை. என்ருலும் இறைவ னுடைய திருமுடியில் அவை பகை நீங்கி ஒருங்கே விளையாடு கின்றனவாம். அறநெறிப்படி உலகத்தைப் புரக்கும் மன்னர் நாட்டில் புலியும் மானும் ஒரு துறையில் நீர் அருந்தும் என்று சொல்வார்கள். அதுபோல இளங் குழவித் திங்களும் இளமையை உடைய பாம்பும் இறைவன் திரு வடியிலுள்ள கங்கை வளாகத்தில் ஒருங்கு விளையாடுகின்றனவாம்.

இறைவனுடைய திருமேனிச் சோதி நெருப்பின் சோதியாக விளங்குகிறது. அவன் திரு மேனியே நெருப்பு மயமானது. ஆதலின் அவனை அனலன் என்று தக்கயாகப் பரணியில் ஒட்டக் கூத்தர் பாடுவார். அந்தச் சோதி முழு வெயிலைப் போலப் பளபளத்து வீசுகிறது.

*அழல் அவிர் சோதி முழுவெயில்*
*எறிப்ப*

அவன் திருமுடியில் இளநிலா வீசும் குளிர்ச்சியான பால சந் திரன் இருக்கிருன்.

*இளநிலவு எறிக்கும் குளிர் மதிக்*
*குழவியும்*

அங்கே, பாம்பும் இருக்கிறது. வெம்மையான சினத்தையும், அதனால் நஞ்சை உமிழும் திறந்த வாயையும், வெள்ளையான முள்ளைப் போன்ற பல்லையும் உடையது அந்த இளையபாம்பு.

*வெஞ்சினம் பொதிந்த பிள்ளை*
*வாள் அரவும்*

[வாள்-கொலைசெய்யும்.]

சந்திரனும் பாம்பும் இறைவன் திருமுடியிலுள்ள கங்கைத் துறையில் யாதோர் அச்சமும் இன்றி, பிறருடைய இடையீடும் இல்லாமல் தனியே விளையாடுகின்றன.

*தெண்திரை கொழிக்கும் தீம்புனற் கங்கைத்*
*தண்துறை மருங்கில் தனி விளையாட*

இவ்வாறு அவை மனம்போன போக்கில் விளையாடும் படியாகத் தன் திருமுடியின்மேல் தன் படர்ந்த சடையின்மேல் ஒருங்கி வைத்துத் தாங்கியிருக்கிறான் சடாதாரியாகிய கடவுள்.

*உடன்வைத்து ஆற்றிய*
*படர்சடைக் கடவுள்,*
*தண்டார் மார்பன்*

அவன் திருமார்பில் பன்றிக் கொம்பை அணிந்திருக்கிறான்; மிக்க வலிமையும் கொடுமையும் உடைய, பிறரை அடர்க்கும் பன்றியின் மூங்கில் முளையைப் போன்ற பல் நன்றாக யாவரும் காணும்படி விளங்குகிறது.

*எறுழ்வலித் தறுகண் தெறுசினக் கேழல்*
*முள்எயிறு இலங்க;*

அதோடு தனக்கேயுரிய கொன்றை மாலையையும் அப் பெருமான் அணிந்திருக்கிறான்; அது மணத்தை விரித்து இதழ்க் கட்டு அவிழ்ந்து அவனுடைய திரு மார்பில் விளங்குகிறது.

*முருகு கொப்பளித்துத்*
*தளை அவிழ் இதழித் தண்தார்*
*மார்ப*

[முருகு-நறுமணம். இதழி-கொன்றை.]

### திண்புயாசலன்

யானைத் தோலையும் சிங்கத் தோலையும், அவன் திருத்தோளில் அணிந்திருக்கிறான். மதத்தை வெளியிடும் இடங்களையுடைய பெரிய யானையின் தோல் அது. சிங்கத்தை உரித்து அதன் தோலையும் அவன் அணிந்திருக்கிறான். இவை இரண்டும் வானளவும் உயர்ந்த திண்ணிய மலை போன்ற திருத்தோள்களில் அசைகின்றன. அத்தகைய புயாசலம் உடையவன் அவன். யானைத் தோல் கருநிறமும் சிங்கத்தோல் வெண்ணிறமும் உடையவை.

அவை இரவும் பகலும் ஓரிடத்தில் சேர்ந்து இருப்பது போலத் தோன்றுகின்றன. அவ்வாறு சேர்ந்திருப்பதற்குக் காரணம் என்ன? இறைவனுக்கு விழிகள் இரண்டு. சூரிய சந்திரர்கள். கதிரவன் உண்டாக்கும் பகலும், சந்திரன் உண்டாக்கும் இரவும் இரண்டு கண்களினால் உண்டாகின்றன. இரண்டு கண்களும் பெருமான் திருமுகத்தில் இருப்பதனால், அவற்றால் உண்டாகும் பகலும் இரவும் ஒரே சமயத்தில் தோன்றுகின்றனவாம். அவை இரண்டும் ஒருபக்கம் கிடந்தாற் போல சிங்கத் தோலும் யானைத் தோலும் காட்சி அளிக்கின்றன.

திருவிழி இரண்டிலும் இருசுடர்
வழங்கலின்,
இரவும் நன் பகலும் ஒருபுடைக்
கிடந்தெனக்
கடம்கலுழ் கரடத் தடங்களிற்று
உரிவையும்
மடங்கல் ஈர்உரியும் உடன் கிடந்து
அலமர
விண்பட நிவந்த திண் புயாசல.

[இருசுடர் – சந்திர சூரியர்கள். வழங்கலின் – உலவுதலால். ஒரு புடை – ஓரிடத்தில். கிடந்தென– கிடந்தாலென; விகாரம்; தங்கின போல. கடம் கலுழ்-மதம் ஒழுகுகின்ற. கரடம்-மதம் உண்டாகும் இடம். தடங்களிறு – பெரிய யானை. உரிவை–தோல்; மடங்கல்– சிங்கம். அலமர–அசைய. விண்பட– வானத்தில் அமைய. நிவந்த- உயர்ந்த. பகல் யாவரும் செயல் செய்யும் நேரமாதலின் நன்பகல் என்றார். யானையையும் சிங்கத்தையும் அடர்த்த தோள் வலியுடையவன் இறைவன்.]

### திருவாரூர்ச் சிறப்பு

இனித் திருவாரூரின் சிறப்பைச் சொல்லத் தொடங்குகிறார்.

திருவாரூரில் பல சோலைகள் சூழ்ந்துள்ளன. அங்கே மகளிர் விளையாடுகின்றனர். கமுக மரத்தில் ஊசலைக் காட்டி அதில் அமர்ந்து விளையாடுகின்றனர். நீண்ட இலைகளையுடையவை கமுக மரங்கள். அவை உயர்ந்து ஓங்கி வளர்ந்து நிற்கின்றன. அந்த உயரத்துக்கு ஏற்றபடி நீண்ட கயிறுகளைக் கட்டி அதில் பொன்னால் ஆகிய ஊசலைக் கட்டிக் கன்னிப் பெண்கள் ஆடுகிறார்கள்.

நெட்டிலைக் கமுகின் நெடுங்கயிறு
ஆர்த்துக்
கட்டுபொன் ஊசல் கன்னியர் ஆட.

[ஆர்த்து-கட்டி.]

அவர்கள் ஊசலை வேகமாக அசைத்து ஆடும் பொழுது பசிய குலைகளையுடைய கமுக மரங்களிலிருந்து பாக்குக்காய் சிந்துகின்றன. முத்துப் பிறக்கும் இடங்களில் கமுக மரமும் ஒன்று. அவர்கள் ஆடும் வேகத்தினால் கமுக மரங்

களிலிருந்து முத்துக்கள் வெடித்துச் சிதறுகின்றன.

பைங்குலைக் கமுகின் பழுக்காய் சிந்த,
வெண்கதிர் நித்திலம் வெடித்து உகு
தோற்றம்

[பழுக்காய்-பாக்கு. வெண்கதிர்-வெண்மையான ஒளியையுடைய. உகு-சிதறும்.]

இந்தத் தோற்றம் எப்படி இருக்கிறது? கமுக மரத்தை மகளிரின் கழுத்துக்கு உவமையாகச் சொல்வது மரபு. தம்முடைய கழுத்தின் அழகைக் கமுக மரங்கள் கவர்ந்து கொண்டன என்று, அவற்றை ஒறுக்கிறார்களாம். திருடியவர்களைத் தண்டிப்பது வழக்கம். தம் கழுத்தின் அழகைத் திருடிய கமுக மரங்களைக் கயிற்றால் கட்டி ஊசலை ஆட்டி அதனால் அவை வருந்தும்படி செய்கிறார்கள். அப்போது அவை தம் கழுத்து உடைந்து உதிரத்தைச் சிந்துகின்றன; கண்ணிலிருந்து முத்து முத்தாக நீரைச் சிந்தி அழுகின்றன. பாக்குக் காய்கள் உதிரத்தைப்போலவும் முத்துக்கள் கண்ணீர்த் துளிகளைப் போலவும் இருக்கின்றன.

கந்தரத்து அழகு கவர்ந்தன இவை
என
அந்தில் ஆங்கு அவர் ஆர்த்தனர்
அலைப்ப,
ஒண்மிடறு உடைந்து ஆங்கு உதிரம்
சிந்தக்
கண்முத்து உகுத்துக் கலுழ்வது
கடுக்கும்

[கந்தரம்-கழுத்து; தலையைத் தாங்குவதனால் கழுத்துக்கு இப்பெயர் வந்தது; கம்-தலை. இவை-இந்தக் கமுக மரங்கள். அந்தில், ஆங்கு; அசைகள். ஆர்த்தனர்-ஆரவாரஞ்செய்து; முற்றெச்சம். அலைப்ப-துன்புறுத்த; தண்டிக்க. ஒண்மிடறு-ஒளி பொருந்திய கழுத்து. முத்து - நீர்த்துளி. உகுத்து-சிந்தி. கலுழ்வது-அழுவது. கடுக்கும்-ஒக்கும்.]

இவ்வாறு மகளிர் ஊசலாடும் சோலைகள் சூழ்ந்தது கமலாலயமாகிய திருவாரூர். அங்கே புலவர்கள் வாழ்ந்து தமிழைப் பரப்பினார்கள். அந்தப்பொலிவையுடைய நகரத்தை ஆட்சி செய்தவன் தியாகப் பெருமான். அவன் இருந்தபடியே நடனம் செய்பவன். அந்த அற்புதமான கூத்துக்கு அஜபா நடனம் என்று பெயர்.

தண்டலை உடுத்த, ஒண்தமிழ்க் கமலைப்
பொற்பதி புரக்கும் அற்புதக் கூத்த.

[தண்டலை-சோலை. தமிழ்க்கமலைப் என்றார், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பிறரும் தமிழ்ப்பாக்களால் அந்தத் திருத்தலத்தைப் பாடியிருப்பதை எண்ணி. புரக்கும்-காப்பாற்றும். அற்புதம்-வியப்பைத் தரும்.]

(வளரும்)

# பெரியார்கள் வாக்கு

மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்

எதையாவது அடையவேண்டும் என்ற வேகம் விருப்பம். உலக வாழ்க்கைக்கு விருப்பமே மூலகாரணம். விருப்பம் என்பது ஆசை அல்லது அவித்தையாகிறது. இவ்வுலக வாழ்க்கைப்பற்றிலே சென்று மறுபிறப்பிற்குக் காரணமாகிறது. இந்தப்பற்றுதலை வைராக்கியம், விவேகம் 'நான் யார்!' என்ற விசாரணையால் அறிந்து அழிக்கப்பட வேண்டும்.இன்னும் நமதுமனேசக்தியை நல்ல விஷயங்களில் திருப்பி ஜபம். செய்தல், தனித்திருத்தல், சிவபூஜை முதலிய நல்ல விஷயங்களில் மனதைக்கட்டுப்படுத்தி ஈசுவரன் பேரில் பக்தியை மேல்கொண்டு வந்தால் பிறப்பில்லா பெருவாழ்வு கிட்டும்.

ஆசைகளை வெல்வதே மனதை வெல்வதாகும். ஏனெனில் மனது ஆசைகளின் மூட்டையேயன்றி வேறு இல்லை. ஆசைகளை அழிப்பதே மோக்ஷம் ஆசையற்றநிலையே உயர்ந்த நிர்விகல்பசமாதியாகும்.சாந்தி, பக்தி,ஞானம் இவற்றிற்கு ஆசைக்குப்பரமசத்துரு ஆசை.சிறிது அளவு இருந்தாலும் பேரின்பம் கிட்டாது. ஆசை விடவிட ஆனந்தமே இது திருமூலர் வாக்கு. ஆசையைவிட நாம் ஈசனிடத்தில் மீளா அன்பு கொண்டும் அவன் சிந்தனையாகயிருக்க வேண்டும். மனதில் எந்த விதமான எண்ணமே தோன்றுமல் இருந்தால் அதுவே மோக்ஷநிலை. ஆனல் இந்த மனசால் ஒரு க்ஷணமும் கூட எதையும் நினைக்காமல் இருக்கமுடியாது. இதற்கு வழி ஈசனிடம் பக்தி செய்தும் தியானம் பஜனை முதலியது இடைவிடாது செய்தல் அது கைகூடும்.

1. நம் கவலைகள் கெட வேண்டுமானுல் என்ன செய்யவேண்டும்
   பதில்: இறைவன் திருவடியைப் பற்றி நிற்க வேண்டும்;
   திருக்குறள்: பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு.

2, நமக்குச் சொந்தமான 3 பொருள்கள் யாவை?
   பதில்: 1. நாம் தருமம் செய்த பணம்
   2. நம் கருத்தை அனுசரிக்கிற பிள்ளைகள்

3 நாம் வழிபாடு செய்த நேரம்.

3. மனித வாழ்க்கைக்கு உயிர் போன்றது எது?
பதில்: பண்பாடு

4. மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது எது?
பதில்: அடக்கம்

5. வீரம் எது?
பதில்: புலன் ஐந்தும் வென்றவன் வீரமே வீரம்.

6. கல்வி என்பது எது?
பதில்: சாகாமல் கற்பதுவே கல்வி

7. எது இனிது?
பதில்: அறிவுள்ளோரைக் கனவிலும் நனவிலும் காண்பது.

8. மனிதன் உயர வேண்டுமானுல் என்ன செய்ய வேண்டும்.
பதில்: உள்ளம் உயர வேண்டும்

9. அன்பு என்பது யாது?
பதில்; பிறருக்குப் பயன் கருதாமல் உதவுதல்; பிறருக்கு பயன் கருதி செய்வது எதாகும்? பதில்: ஆசையாகும்,

10. ஆசை என்ன செய்யும்?
பதில்: பிறவியைக் கொடுக்கும்

11. அன்பு என்ன செய்யும்?
பதில்: பிறவியைக் கெடுக்கும்

12. ஒன்பது கோடி பொருளேயும் துறந்த மகான் யார்?
பதில்: பட்டினத்தார்

13. கல்விக்கு அதி தேவதை எது?
பதில்; சூரியன்

14. சிவகுமாரர்கள் எத்தனை பேர்?
பதில்: 1. விநாயகர் 2. வீரபத்திரர் 3. வேலவர் 4; பைரவர்

15. கடவுள் என்னும் சொல் எதனுல் வந்தது?
பதில்: உலகங்களேயும் உயிர்களேயும் செலுத்துவதனுல்;

16. சிறந்த நெறி யாது?
பதில்: இறைவனே மலரிட்டு வணங்குவது.

17. கவலைகள் எதனால் உயருகின்றன?
பதில்; செல்வம் உயர்வதனால்

18. தானங்களில் சிறந்தது எது?
பதில்: அறிவுத்தானம், சமாதானம்

19. ஆதாரங்கள் எத்தனை? அவை யாவை?
பதில்: ஆறு 1. மூலாதாரம் 2.சுவா திட்டானம் 3.மணிபூரகம் 4. அனாகதம் 5. விசுச்சி 6. ஆஞ்சியா

20. நமக்கு சொந்தம் எது?
பதில்: ஆறு அடி நிலம் தான்

21. தெய்வப்பணி யாது?
பதில்; மக்களுக்குச் செய்கின்ற சேவை

22. நம் உடம்பு எடுத்ததின் காரணம் யாது?
பதில்; நல் வினை தீவினையின் காரணம்

23. நாம் பிறவியின் பயன் பெறும் பேறு யாது?
பதில்; உடம்புக்குள் உறையும் உத்தமனைக் காண்பது

24. நமக்கு இருவழி யாவை?
பதில்: 1. ஆகும் வழி 2 சாகும் வழி. சிவத்தைப்பேணித் தவத்தைச் செய்வது ஆகும் வழி அவநெறி சென்று வெறும் பொழுது போக்குவது சாகும் நெறி ஆகும்.

25. உயிருக்கு உறுதுணையாக நிலைத்து நிற்பது எது?
பதில்: இறைவன் திருவடி ஒன்றே

26. அறிவு எத்தனை வகைப்படும்?
பதில்; 4 வகைப்படும் 1. படிப்பினால் வருவது 2. அனுபவத்தால் வருவது 3. அருளால் வருவது 4. ஆராய்ச்சியால் வருவது

27. பந்த பாசம் விலக மனிதன் செய்ய வேண்டியது யாது?
பதில்; சாதுக்களோடு பழகுவது, அறநூல்களைப் படிப்பது

28. மனிதனுக்குப் பெரும் ஆபத்து எது?
பதில்: பெண் ஆசை

29. மனிதனுக்கு உண்மையான உறவு யார்?
பதில்: கடவுள்

30. மனிதனுக்கு முதல் கடமை யாது?

பதில்: கடவுள் வழிபாடு

31. மனிதன் இறந்த பின் கூட வருவது எது?

பதில்: அவன் செய்த தருமம்

32. நம்மை கெடுப்பதும், உயர்த்துவதும் எது?

பதில்; நமது எண்ணம்

33. துன்பம் வராமலிருக்க மனிதன் என்ன செய்ய வேண்டும்?

பதில்: தர்மம் செய்ய வேண்டும்

34. உடம்பு எதைப் போன்றது?

பதில்; வாடகை வண்டி போன்றது

35. தெய்வீக வழியில் நடப்பவன் அனுசரிக்க வேண்டியது யாது?

பதில்: ஒழுக்கமுடனிருத்தல்

## ஆசிரிய விருத்தம்

அங்கிங் கெனுதபடி எங்கும் ப்ரகாசமாய்
    ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
    அகிலாண்டகோடி யெல்லாம்
தங்கும்படிக் கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
    தழைத்த தெது மன வாக்கினுல்
தட்டாமல் நின்றதெது சமயகோ டிகளெல்லாந்
    தந்தெய்வம் எந்தெய்வ மென்று
எங்குந்தொடர்ந் தெதிர் வழக்கிடவும் நின்றதெது
    எங்கணும் பெரு வழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பமாய்
    என்றைக்கு முள்ள தெதுமேல்
கங்குல் பகலற நின்ற எல்லையுள தெதுஅது
    கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலா மோன வுருவெளிய தாகவும்
    கருதி அஞ்சலி செய்வோம்.

பொருள்;- அவ்விடத்தில் தான் உள்ளது, இவ்விடத்தில் தான் உள்ளது என்று சுட்டிக்கண்ட பொருளாய் சொல்லா வண்ணம்

எவ்விடத்திலும் காணப்படும் தேஜோமயமாகிய சுக நிரம்பியதாகிய தனது கிருபா சக்தியோடு பரவியிருப்பது எந்த பொருள்; தனது அருள்வடிவமாகிய ஆகாயத்தில் சர்வயோகங்களும் அவற்றினுள் ளிண்டிய சாரசரங்களும் நிலைத்திருக்க அன்பு வைத்து அவ்வகைகளின் உயிருக்குயிராய்த் தழைத்திருப்பது எந்தப்பொருள்; மனத்துக்கும் வாக்குக்கும் அதீதமாய் அழியாமல் நித்தியமாயிருப்பது எந்தப் பொருள். சமயக் கூட்டங்கள் யாவும் தம்முடைய தெய்வ மென்றும் எம்முடைய தெய்வ மென்றும் எவ்விடத்திலும் சென்று நேர் நின்று வாதிக்க இடமாயும் இருப்பதும், எந்தப் பொருள் எவ்விடத்திலும் தீராத பெரிய வழக்காகி எல்லாவற்றிலும் வல்லமையுடைய ஒப்பற்ற ஞானவடிவாகவும், அன்புவடிவாகியும், எந்நாளும் ஒரே படித்தாய் இருப்பது எந்த பொருள்; பின்னரும் இராப்பகலற்ற இடத்துள்ளது எந்த பொருள்; அந்தப் பொருளே எமது மனத்திற்குப் பொருந்தினது ஆதலால் அப்பொருளையே பார்த்த எல்லா பொருள்களாவும் மௌன ரூபத்தில் வெளிப்படுத்தாலும் நினைத்துக் கைகுவித்து வணங்குவோம்.

# 60. ஒரு பெரிய நாட்டை ஆளும் முறை

தமிழாக்கம்: வன்மீகநாதன்.

ஒருசிறு மீனை வறுப்பது போல ஒரு பெரிய நாட்டை ஆளுக.[1]
எவனொருவன் டௌவின் நெறிப்படி[2] ஆள்கின்றானோ
அவன் (துஷ்ட) தேவதைகள் தம்ஆற்றலை இழக்கின்றன
என்பதைக் காண்பான்
துஷ்ட தேவதைகள் தம்ஆற்றலை இழக்கின்றன என்று கூறுவது
பொருந்தாது;
அவை மக்களுக்குத் தீமை செய்வதை ஒழிகின்றன
அவைகள் மட்டும் மக்களுக்குத் தீமை செய்வதை ஒழிவதில்லை
மெய்ஞானியும்கூட மக்களுக்கு யாதொரு தீமையும் செய்வதில்லை
(இவ்வண்ணம்) இருவரும் மக்களுக்குத் தீமை செய்யாத போது
முன் வழக்கில் இருந்த நல்லொழுக்கமும் பண்பாடும்
மீண்டும் நடைமுறைக்கு வருகின்றன

---

1. சிறுமீனை வறுக்கும்போது அடிக்கடி சட்டுவத்தால் புரட்டிக் கொண்டே இருந்தால் அம்மீன் உருக்குலைந்து ஒரு துவையல் போல் ஆகிவிடும்.
2. டௌ என்றால் பரப்பிரம்மம் என்று பொருள். டௌவின் நெறி என்று இங்குச் சொல்லப்பட்டது யாதெனில், திருவள்ளுவர் கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்தில் ஆறும் குறளில் ",பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி'' என்று குறிப்பிட்ட நெறியேயாகும். அந்நெறியோ, சிறப்பாக, திருக்குறளில் அறத்துப்பாலில் அன்பு முதல் அவா அறுத்தல் ஈறாகி உள்ள அதிகாரங்களிலும் பொதுவாகப் பொருட்பாலில் எழுபத்தைந்து அதிகாரங்களிலும் கூறப் பட்டுள்ளது. இந்த ஒற்றுமை வேறு எந்த இலக்கியத்திலும் காண முடியாது என்று துணிவாகக் கூறுகிறேன்.

# 61. பெரிதும் சிறிதுமான நாடுகள்

ஒரு பெரிய நாடு. ஆறு கடலில் சங்கமம் ஆகும். தாழ்வான சதுப்பு
நிலம் போல இருக்க வேண்டும்.
உலகனைத்தும் சங்கமம் ஆகும் இடம் ஆதலாலும்
உலகின் பெண்மைப் பகுதி ஆதலாலும்
பெண்மைத் தன்மை ஆண்மைதைத் தன் அடக்கத்தினால் வெல்கிறது.
தனது தாழ்வான நிலையை அடக்கத்தினால் பெறுகின்றது.

ஆகையினால் ஒரு பெரும் நாடு தன்னை ஒரு சிறிய நாட்டுக்குக் கீழ்
அமைத்துக் கொள்ளுமானால் அது அந்தச் சிறிய நாட்டைத்
தன்னுடையதாய் ஆக்கிக் கொள்கிறது.

ஒரு சிறிய நாடு தன்னை ஒரு பெரிய நாட்டிற்குக் கீழ் அமைத்துக்
கொள்ளுமானால் அது அப்பெரிய நாட்டை விழுங்கி விடுகிறது
ஆகையால் சிலர் மற்றவர்களை விழுங்கி கொள்வதற்காகத் தம்மைத்
தாமே தாழ்ந்த நிலையில் வைத்துக் கொள்கிறார்கள்.
மற்றும் சிலர் இயல்பாகவே தாழ்ந்த நிலையில் இருந்து மற்றவர்களைத்
தம்முடையவர்களாய் ஆக்கிக் கொள்கிறார்கள்.

ஒரு பெரிய நாடு வேண்டுவது யாதெனில் பிறநாடுகள் தன்
கொடைக்கீழ் இருப்பதற்கு இடம் அளிக்கவேண்டுவதே
ஒரு சிறிய நாடு வேண்டுவது யாதெனில் ஒரு பெரிய நாட்டின்
கொடைக்கீழ் வந்து அங்கு தங்குவதற்கு இடம் பெறுவதே
இவ்வண்ணம் இரண்டும் தாம்தாம் வேண்டுவதைப் பெறவேண்டும்
என்பதை எண்ணிப் பார்த்தால்
ஒரு பெரிய நாடு தன்னைத் தாழ்ந்த நிலையில் வைத்துக் கொள்ள
வேண்டும்.

# ஸ்ரீ குமரகுருபரர் நெறி விளக்கம்
# நீர்க்குமிழி

நெல்லை சிவமணி புலவர் **ம. சிவசம்பு** பி. லிட்.,

பிள்ளைகள் எல்லோரும் ஆனந்தமாக விளையாடிக் கொண்டு இருந்தனர். மழைபெய்து தண்ணீர் தெருவில் சலசலவென ஓடிக்கொண்டிருந்தது. தண்ணீர் செல்லுகின்ற வேகத்தில் நீர்க் குமிழிகள் கொஞ்ச தூரம் தண்ணீரில் சென்றுபின் அழிந்து விடுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். நாமும் குழந்தைகளைப் போலவே நீரையும் நீர்க்குமிழியையும் வேடிக்கைப் பார்க்கிறோம். அத்தோடு நின்றுவிடுகிறோம். ஆனல் அடியவர்கள் உள்ளத்தில் நீரும் நீர்க்குமிழியும் எத்தனை சிந்தனையைத் தூண்டிவிகிறது.

உலகில் கலைகளால் வரும் உணர்ச்சி, கல்வி, வீரம், மலை போன்ற செல்வம், வலிமை, இளமை, பதவி முதலியன யாவும் நிரந்தரமானவை என்று நினைக் கிறீர்கள். அவைகள் நீர்க் குமிழிக்கு நிகரானவை. நிலை யற்றவை. அதை யார் உணர் கின்றார்கள்? இறை உணர்வுடை யவர்கள் நன்கு உணர்ந்திருக் கிறார்கள். கச்சியப்ப முனிவர் தாம் உணர்வதோடு மட்டும் அல்லாமல் நமக்கும் அதை உணர்த்துகிறார்கள்.

'கலைபடும் உணர்ச்சியும்
கற்பும் வீரமும்
மலைபடும் வெறுக்கையும்
வலியும் மற்றதும்
அலைபடும் புற்புதம்
ஆகும் அன்னவை
நிலைபடு பொருளென
நினைக்க லாகுமோ'
(புற்புதம்-நீர்க்குமிழி)

என்கிறார்கள் கந்தபுராணத்தில்.

தாயுமானவர் இறைவா நீ நீர்! நான் நீர்க்குமிழி! நீர்க்குமிழி போன்ற என் உடல் நிலையில்லாதது. அதற்குத்தான் எத்தனை துன்பங்கள்? நான் உன்மீது பற்று வையாது என் உடல்மீது பற்று வைக்கிறேனே என்று கூறுகிறார்.

'நித்திய மென்றிலாத
நீர்க்குமிழி போன்றவுடற்கு
இத்தனைதான் துன்பமுண்டோ
என்னே பராபரமே'
-தாயுமானவர்.

நம் குமரகுருபர அடிகள் நம்மைத் திருச்செந்தூர் கடற் கரைக்கு அழைத்துச் செல்கிறார்;

கடல் அலைகள் ஒன்றன்பின் ஒன்ருக உயர்ந்து தோன்றி சுருண்டு விழுகின்ற வேகத்தில் நீர்க்குமிழிகள் தோன்றி மறைகின்றன. அடிகளார் உள்ளத்தில் அழகியதோர் சிந்தனை உருவாகியது. அது பாடலாக மலர்ந்தது.

நம்மவர்களே! இளமைப் பருவம் நிலைத்தது என்று நினைக்கிறீர்களா? நீங்கள் பாடுபட்டுத் திரட்டிய செல்வம் நிலைத்தது என்று நினைக்கிறீர்களா? இவ்வுடம்பு நிலையானது என்று நினைக்கிறீர்களா? இவ்வுலகம் நிலையானது என்று நினைக்கிறீர்களா? இவைகள் எல்லாம் நிலையற்றவை அல்லவா?

நீரில் தோன்றும் குமிழி பளபளவென மின்னிக் காணப்படினும் விரைவில் அழிந்து விடும். அதைப் போன்றே ஒருவர் தம் இளமையும் தொடக்க காலத்தில் மிகவும் அழகும் இன்பமும் உடையதாகத் தோன்றினும் விரைவில் அழிந்துவிடும். நீரில் தோன்றும் நெடிய அலைகள் ஓரிடத்தில் நிலையாக இல்லாமல் பல்வேறிடத்துக்குச் சென்று மறித்து மறித்து விழும்: அது போலவே உங்கள் பெருஞ் செல்வமும் நிலைபேறின்றி அழிந்து விடும். நீரில் எழுதப்படும் எழுத்தும் எழுதிய அப்பொழுதே அழிந்து விடும்: அஃது எழுதிய இடமும் தெரியாது. அதைப் போன்றே மக்களின் வாழ்க்கையும் விரைவில் அழிந்துவிடும். நிலையில்லாத உலகில் பிறந்த நாம் நிலைத்ததொரு காரியத்தைச் செய்ய வேண்டாமா? வீணே இருப்பது நலமா? எம்பெருமானுடைய மன்றத்தை வணங்கி வாழ்த்த வேண்டாமா? என்று வினவுகிருர்.

நீரிற் குமிழி இளமை நிறை
செல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்-
நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள்
என்னே
வழுத்தாதது எம்பிரான் மன்று;
-நீதிநெறிவிளக்கம்



## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### குடல் புண்ணுக்கு (ALCER)

1. தினசரி காலையில் பல் துலக்கியதும் வெறும் வயிற்றில் பதநீர் சாப்பிட்டுவர குடல்புண் நீங்கும்;

### மகப்பேறுஉண்டாக

2. தினசரி காலையில் பல்துலக்கியதும் அரசுஇலை கொழுந்து வேப்ப இலைக்கொழுந்து இவ்விரண்டையும் சேர்த்து ஒருபிடி வெறும் வயிற்றில் சாப்பிட்டுவர மகப்பேறு உண்டாகும்.

Dr N. சடையப்பன் S. M. P.

# தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம்

## தஞ்சை மாவட்ட மாநாடு

பேரன்புடையீர்!

17—5—82 திங்கட்கிழமை, நமது சங்கத்தின் தஞ்சை மாவட்ட மாநாடு குடந்தை மாநகரில் அனைத்து சைவத்திரு மகா சன்னிதானங்களின் முன்னிலையில் சீரும், சிறப்புடனும் நடைபெற உள்ளது. அவ்விழாவிற்கு உயர் நீதி மன்ற நீதிபதிகளும், மாநில அமைச்சர்களும் சட்டமன்ற உறுப்பினர்களும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்ற இருக்கின்றார்கள். இம்மாநாட்டில் நமது சங்க உறுப்பினர்கள் அனைவரும் பெருந்திரளாகக் கலந்து கொண்டு சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம். மாநாட்டில் ஊர்வலம், கலை நிகழ்ச்சி, மாதர் அணி, இளைஞர் அணி இடம் பெறுகிறது.

மாநாட்டு அலுவலகம்
39, நாகேஸ்வரன் சந்நிதி,
குடந்தை

தங்கள்,
விழாக் குழுவினர்

---

# தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம்

## திருவிடைமருதூர்

இச்சங்கத்தின் 12 வது ஆண்டு விழாவும், அப்பர் சதய விழாவும் 19—4—82 திங்கள் மாலை ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் சீரிய தலைமையின் கீழ் நடைபெற்றது.

விழாவில் அருளாசி வழங்கிய சுவாமிகள் எண் பன்னிரண்டின் முக்கியத்துவத்தைப் பற்றியும், சிவ நெறியானது பெரு நெறி என அழைக்கப்படுபதாகவும், காரணம் அன்பு, அறம், ஆகாரம், சீலம், தவம், தெய்வக் கொள்கை, தெய்வ வழிபாடு, நல்லவர் இணக்கம்

ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளது சைவ சமயமே எனத் திருவாய் மலர்ந்தருளினார்கள். மேலும் சைவ சமயம் மட்டுமே அறம், பொருள், இன்பம், வீடு பற்றிக் கூறுகிறது என்றும், சைவ சமயத்தில் மட்டுமே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகள் இருக்கின்றது எனவும், சைவ சமயம் அனைத்துத் தெய்வங்களையும் தழுவி உள்ளது என்றும், இறைவனை ஐம்புலன்களால் வழிபடல் வேண்டும், சமயம் மட்டுமே மனிதனை விலங்கிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது, சைவ சமயமே உலகத்திலுள்ள அனைத்து மதங்களிலும் சிறந்தது எனவும் திருவாய் மலர்ந்தருளினார்கள். மேலை நாட்டினர் கூட சமய உணர்வு கொண்டுள்ளனர் என்றும், ஆனால் நாம் அதனை உணராமல் இருக்கின்றோம் என்றும், சமய உணர்வு வளர இது போன்ற சங்கம் வேண்டும் எனவும் அருளினார்கள்.

அடுத்துப் பேசிய திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் 'நால்வர் காட்டிய நன்னெறி' என்னும் தலைப்பில் மிக அழகாகவும், ஆழமாகவும் உரையாற்றினார்கள்

இவ்விழாவில் தஞ்சை மாவட்டத் தலைவர் திரு. N. காங்கேயன் பிள்ளை அவர்களுக்கு ''சைவ நெறிக் காவலர்'' என்ற பட்டத்தினையும், தஞ்சை மாவட்டச் செயலர் திரு. S. திருநாவுக்கரசு அவர்களுக்கு ''சைவ முரசு'' என்ற பட்டத்தினையும், தஞ்சை மாவட்டப் பொருளர் திரு. P. சுவாமிநாதன் அவர்களுக்கு ''சைவ நெறிச் செம்மல்'' என்ற பட்டத்தினையும், திருவிடைமருதூர் சங்கத்தின் சார்பாக ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ எஜமான் சுவாமிகள் அவர்கள் வழங்கினார்கள்.

இதழ்கள் சந்தாதாரர்களுக்குத் தொடர்ந்து அனுப்பப் பெறுகின்றன. முகவரி மாற்றங்கள் உடனுக்குடன் பதிவு செய்யப் பெறுகின்றன. இதழ் வரவில்லை என்ற புகார்க் கடிதங்கள் அனைத்திற்கும் பதிலெழுதுவது சாத்தியமில்லை. இதழ் தொடர்பான கடிதங்கள் எவையும் என் பெயரிட்டு எழுதாமல் 'நிர்வாக ஆசிரியர்' ஸ்ரீ குமரகுருபரர், ஸ்ரீ காசி மடம் திருப்பனந்தாள் 612 504 என்ற முகவரிக்கே எழுத வேண்டுகிறேன்.

- நி. ஆ-ர்

# தருமசாசனம்

திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அண்மையில் நிறுவிய தருமங்களின் விவரம்

எண் 68. திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் கோசம் ரக்ஷணை நிதி. ரூ 31,000/

இதன் வட்டி வருமானம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் பசுக்களைப் பாதுகாக்க, வளர்க்க, பயன்படுத்தப் பெறும்.

எண் 69. காசியில் மார்கழிப் பரணியில் பால் அபிஷேக அன்னம் பாலிப்பு நிதி முதற்பொருள் 2, 500/

இதன் வட்டி வருமானத்தைக் கொண்டு மார்கழிப் பரணி நாளில் காசி ஸ்ரீ கேதாரேஸ்வரருக்கும் ஸ்ரீ விசுவநாதருக்கும் பால் அபிஷேகமும் ஸ்ரீ குமார சுவாமி மடத்தில் அன்னம் பாலிப்பும்நடைபெறும்.இத்தொகை மதுரை திரு சு. அருணாசல முதலியார் அளித்தது:

எண் 70 திருச்சேய்ஞலூரில் சிவாசாரியர் படிக்காசு நிதி முதற்பொருள் 6, 000/

இதன் வட்டி வருமானத்தில் திருச்சேய்ஞலூர்ச் சிவன் கோயில் சிவாசாரியாருக்கு மாதம் ரூ. 50 படிகாசுகளாக அளிக்கப்பெறும்.

எண் 71. வாரணாசியில் அட்சயதிதியை சிறப்பு அன்னம் பாலிப்பும் நிதி முதற்பொருள் ரூ.1000/

இதன் வட்டித் தொகையால் ஆண்டுதோறும் ஷி நாளில் சிறப்பு அன்னம் பாலிப்பு நடைபெறும்,

எண் 72 திருவிடைமருதூர் மூகாம்பிகை நவராத்திரி அர்ச்சனைநிதி முதற்பொருள் 1, 500

இதன் வட்டி வருமானம் திருவிடைமருதூர் ஸ்ரீமூகாம்பிகை அம்பாளுக்குப் புரட்டாசிவளர்பிறை பிரதமை முதல் தசமி முடிய 10 நாட்கள் நாளான்றுக்கு ஒரு சகஸ்ரநாம அர்ச்சனை செய்யப்பயன் படுத்தப்பெறும். இத்தொகை திருவிடைமருதூர் காமகோடிமாதர் சங்கத்தாரால் அளிக்கப்பெற்றது.

73 வாரணாசி குமார சுவாமி மடத்தில் அன்னம் பாலிப்பு நிதி முதற்பொருள் 1, 000/

இதன் வட்டி வருமானம் சித்திரை சுக்ல பட்ச பிரதமை அன்றும் தைசுக்ல பட்ச துவாதசி தினம் அன்றும் வராணசி ஸ்ரீகுமார சுவாமி மடத்தில் அன்னம் பாலிப்பு நடத்தப்பயன்படுத்தப்பெறும் இது சென்னை திருமதி அலமேலு அம்மாள் திரு டி. வி. நாராயண ஐயர் அளித்த தொகை.

# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

### துந்துபி ஸ்ரீ வைகாசிமீ (1982 மே — ஜூன்)

### திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ | ஆங்கிலவ | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (15—5—82) | சனி | சப்தமி 29-04 | திருஓணம் 18-57 |
| 2 | (16—5—82) | ஞாயிறு | அஷ்டமி 23-10 | அவிட்டம் 20-47 |
| 3 | (17—5—82) | திங்கள் | நவமி 23-31 | சதயம் 21-52 |
| 4 | (18—5—82) | செவ்வாய் | தசமி 23-00 | பூரட்டாதி 22-07 |
| 5 | (19—5—82) | புதன் | ஏகாதசி 21-40 | உத்திரட்டாதி 21-32 |
| 6 | (20—5—82) | வியாழன் | துவாதசி 19-35 | ரேவதி 20-13 |
| 7 | (21—5—82) | வெள்ளி | திரயோதசி 16-52 | அசுவனி 18-16 |
| 8 | (22—5—82) | சனி | சதுர்த்தசி 13-40 | பரணி 14-51 |
| 9 | (23—5—82) | ஞாயிறு | ●அமாவாசை 10-10 | ※கார்த்திகை 13-90 |
| 10 | (23—5—82) | திங்கள் | பிரதமை 6-32<br>துதியை 26-56 | ரோகிணி 10-20 |
| 11 | (24—5—82) | செவ்வாய் | திரிதியை 26-56 | மிருகசிரிடம் 7-34<br>திருஆதிரை 29-02 |
| 12 | (25—5—82) | புதன் | சதுர்த்தி 50-25 | புனர்ப்பூசம் 26-5 |
| 13 | (26—5—82) | வியாழன் | பஞ்சமி 17-47 | பூசம் 25-11 |
| 14 | (27—5—82) | வெள்ளி | சஷ்டி 15-40 | ஆயில்யம் 24-03 |
| 15 | (28—5—82) | சனி | சப்தமி 14-08 | மகம் 23-31 |
| 16 | (29—5—82) | ஞாயிறு | அஷ்டமி 13-14 | பூரம் 23-36 |
| 17 | (30—5—82) | திங்கள் | நவமி 12-57 | உத்திரம் 24-15 |
| 18 | ( 1—6—82 ) | செவ்வாய் | தசமி 13-15 | ஆயில்யம் 17-37 |
| 19 | ( 2—6—82 ) | புதன் | ஏகாதசி 14-05 | சித்திரை 27-14 |
| 20 | ( 3—6—82) | வியாழன் | துவாதசி 15-23 | சுவாதிமுழுவதும் |
| 21 | ( 4—6—82 ) | வெள்ளி | திரயோதசி 17-10 | சுவாதி 5-23 |
| 22 | ( 5—6—82 ) | சனி | சதுர்த்தசி 19-10 | விசாகம் 7-5- |
| 23 | ( 6—6—82 ) | ஞாயிறு | ○பௌர்ணமி 21-29 | அனுஷம் 10-42 |
| 24 | ( 7—6—82) | திங்கள் | பிரதமை 23-56 | கேட்டை 13-42 |
| 25 | (8—6—82 ) | செவ்வாய் | துதியை 26-34 | மூலம் 16-49 |
| 26 | (9—6—82 ) | புதன் | திருதியை 29-05 | பூராடம் 19-56 |
| 27 | (10—6—82) | வியாழன் | சதுர்த்திநாள்முழுவதும் | உத்திராடம் 22.54 |
| 28 | (11—6—82) | வெள்ளி | ,, 7-23 | திருஓணம் 25-34 |
| 29 | (12—6—82) | சனி | பஞ்சமி 9-20 | அவிட்டம் 27-46 |
| 30 | (13—6—82) | ஞாயிறு | சஷ்டி 10-45 | சதயப் நாள்முழுவதும் |
| 31 | (14—5—82) | திங்கள் | சப்தமி 11-30 | ,, 5-21 |

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ., திருப்பனந்தாள்.

15. ஈங்குஇது என்று அதுகடந்த இயல்பி னானும்
ஈறுமுதல் நடுவுஒன்றும் இலாமை யானும்
ஓங்கிவளர் ஞானமயன் ஆத லானும்
உண்மைபிறர்க்கு அறிவரிய ஒருமை யானும்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பும் எல்லாம்
சார்வரிய தனிமுதல்வன் ஆத லானும்
நீங்கலரும் உயிர்க்குயிராய் நிற்ற லானும்
நிறுத்திடுவன் நினைந்தஉரு நிமலன் தானே.

(தெ-ரை) இவ்விடத்தது இவ்வியல்பினது என்று உயிர் தன்னறிவால் அறிதற்கரிய இயல்பாலும், முதல் நடு ஈறு என உரைத்தற்கு அரிய கால எல்லை இல்லாத தன்மையாலும், மேம்பட்டு விளங்கும் ஞான வடிவினன் ஆகையாலும், தன்னியல்பு பிறருக்கு அறிய இயலாத நுண்ணறிவினனாய் இருத்தலாலும், தாங்குதற்கு அரிய வெறுப்பும் விருப்பும் முதலாய உயிர்க்குணங்கள் யாவும் பொருந்துதல் இல்லாத ஒப்பற்ற முதல்வனாய் இருத்தலாலும், உயிரிடத்துப் பிரிவின்றி உயிர்க்குயிராய் நிற்கும் இயல்பினாலும் வினையின் நீங்கி விளங்கிய அறிவினனாகிய சிவபெருமான் தான் நினைந்த வடிவைத் தானே கொள்ளுவன்.

இப்படியன் இவ்வண்ணத்தன் எனச் சுட்டி உணரப்படும் இயல்பினன் அல்லன் இறைவன். 'அல்லை ஈது அல்லை ஈதுஎன மறைகளும் அன்மைச் சொல்லினால் சொல்லித் திகைக்கும் இச் சுந்தரன்' என்பர் பரஞ்சோதியாரும். காலப்பழைமை கடந்தவனாதலின் முதல் நடுஇறுதி எனக் காலத்தொடு படுத்துக் கூறற்கரியவனாயினன். இறைவனின் திருக்மேனி கருவயத்தால் உருவாயதன்று; அருள் வயத்தால் அறிவாகநிற்பதாகும். 'ஞானம் தான் உருவாகிய நாயகன் இயல்பை யானும் நீயுமாய் இசைத்துமென்றால் அஃது எளிதோ', ''ஞானம் திருவுருவா இச்சை செயலறிவு கண்ணா'' எனவரும் திருவாக்குகளும் காண்க. அளவில் ஆற்றல் முற்றுணர்வு முதலாய எண்குணங்களையும் இறைவன் உடையன். அவ்வியல்பினனாகிய இறைவனை முழுமையாக

உணரவும் அவன் பொருள்சேர் புகழை முழுமையாக ஓதவும் அரிதாம். 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்பர் சேக்கிழாரும். உயிர்க்குயிராக விளங்குபவன் இறைவன் ஆதலின் எவ்வுயிர் களிடத்தும் வேண்டுதல் வேண்டாமை இல்லாதவனுகின்ருன். அத்தகையோனை அவன் அருள்வழி நின்று அணைந்தாலன்றி பிறவழி நின்று அறிதற்கில்லை. ஆதலின் 'சார்வரிய தனி முதல்வன்' என்ருர் இனைய பல பண்புகளால் அவன் நினைவு மாத்திரையின் நினைந்த உருவினைக் கொள்பவனுய் விளங்குகின்ருன்.

குறித்ததொன் ருக மாட்டாக் குறைவிலன் ஆத லானும்
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமையானும்
நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளி னலே.

என்னும் சிவஞான சித்தியாரும்.

16; உலகம்எலாம் ஒருவனேடு ஒருத்தி என்றுஒன்று
உளதாகி நின்று அளவில் ஒடுங்கும்; பின்னும்
மலமதனுல் உளதாகும்; உருவம் மாறி
வருவது போவது செல்வது ஆதலானும்,
அலைவில் அசே தனம்மாயை ஆதலானும்,
அணுக்கள்உரு அடையும் அறிவு இவாமை யானும்,
நிலவுதொழில் மருவிஉரு நிற்ற லானும்,
நின்று எவையும் அளித்திடுவன் நிமலன் தானே;

(தெ-ரை) உலகமெல்லாம் அவன் அவள் அது என்னும் பகுப் புடையதாய்த் தோன்றி நின்று தத்தம் கால எல்லையில் ஒடுங்கி நிற்கும். உயிரது அறிவைத் தகைத்த ஆணவம் நீங்காமையின் அது நீங்குதற் பொருட்டு உலகம் மீளவும் தோன்றும். உடலும் கன்மத் துக்கு ஈடாக மாறிமாறித் தோன்றியும் அழிந்தும் துறக்க நிரயங்களில் சென்றும் வரும். மாயை தனக்கென ஒரு செயலின்றி அறிவற்ற பொருளாய் இருத்தலாலும், உயிர்களும் தனக்குரிய உடல்களைத் தாமே எடுத்தற்கேற்ற அறிவு இல்லாமையாலும், உடல் தன்னுள் இருக்கும் உயிரின் தொழிலையே பொருந்தி நிற்றலாலும் சிவபெருமானே இவற்றிற்குக் காரணனுய் நின்று, உயிர்களை உய்வித் தருளுவன்.

'அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே', 'ஒருவனேடு ஒருத்தி ஒன்றென்று உரைத்திடும் உலகம்

எல்லாம் வருமுறை வந்துநின்று போவதும் ஆதலாலே தருபவன் வேண்டும்' என்னும் திருவாக்குகள் ஈண்டு நினைவுகூரத் தகும். அளவில் ஒடுங்கும்-தத்தம் கால எல்லையில் ஒடுங்கும். 'ஒடுங்கும் பின்னும் மலமதனுல் உளதாகும்' என்ற தொடர், 'ஒடுங்கி மலத்துளதாம் என்னும் திருவாக்கினை நினைவுகூரச் செய்யும். உருவம் மாறிவருவது போவது செல்வது ஆதலானும் என்னும் பகுதி, 'மூவினைமையின் என்னும் சிவஞான போதத் தொடரையும், அதற்கு விளக்கமாக நிற்கும் 'வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே தருபவன் ஒருவன் வேண்டும்' எனவரும் சித்தியார்ப் பகுதியையும் நினைவுகூரச் செய்யும்.

உலகம் அழியாதது. அதனைப் படைக்கவும் துடைக்கவும் ஒரு முதல்வன் வேண்டுவதில்லை என்பர் உலகாதயர். ஒருவனோடு ஒருத்தி ஒன்றென்று உரைத்திடும் உலகம் ஓரியல்பினதாய் அன்றி அவ்வக் கால எல்லையில் அவ்வப்பொருள்களும் தோன்றியும் நிலைபெற்றும் அழிந்தும் வருவதற்கு ஏதுவாய் அமைந்திருக்கும் நிலையைக் காண்கின்றோம் இவ்வாறு செயற்படுதற்கு உலகிற்கு எவ்வித ஆற்றலும் இன்று. அறிவும் இன்று ஆதலின் தருபவன் ஒருவன் வேண்டும் என அவர் கருத்தை மறுத்ததாயிற்று.

உலகத் தோற்றத்திற்கு மாயையே அமையும்: பிறிதொரு முதல்வன் வேண்டுவதில்லை என்பர் சாங்கியர். உலகத் தோற்றத் திற்கு மாயை முதற் காரணமாயினும் அது அறிவற்றதாதலின் அவ்வருஞ் செயலைச் செய்தற்கு இயலாததாகும். ஆதலின் மாயை யினும் வேருக முதல்வன் ஒருவன் வேண்டுவதாயிற்று. உயிர்களும் தமக்கேற்ற உடலை எடுத்தற்கேற்ற அறிவும் உரிமையும் உடைய வல்ல. உடலும் ஒரு அறிவுடைப் பொருளின் வழி இயங்குவதல்லது தானே இயங்குதற்குரியதன்று. இவ்வாற்ருன் இவையனைத்தையும் ஒழுங்காகவும் ஒருங்கு நின்று செயற்படவும் ஒரு முதல்வன் வேண்டுவ தாயிற்று. அலைவு இல்-செயற்படுதல் இல்லாத; அசேதனம்- அறி வற்றது. அணுக்கள்- உயிர்கள்.

17; கந்தமலர் அயன்படைக்கும் உலகம்எல்லாம்
கண்ணன் அளித்திடும் அவைஎம் கடவுள்தானே
அந்தம்உற அழித்திடுவன் ஆதலாலே
அயன் அரியும் அவனதுஉயர் அதிகாரத்து
வந்தமுறை தன்தொழிலே மன்னுவிப்பன் எல்லாம்
வருவிப்பன் விகாரங்கள் மருவான் வானின்

முந்துஇரவி எதிர்முளரி அலர்வுறும்ஒன்று அலர்வான்
முகையாம் ஒன்று ஒன்றுஉலரும் முறையின் ஆமே.

(தெ-ரை) நறுமணம் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகன் உலகம் எல்லாவற்றையும் படைப்பன். திருமால் அவ்வுலகங்களைக் காப்பன். அவற்றை எம் சிவபெருமானே இறுதி பெறுமாறு அழிப்பன். ஆதலின் அயனும் மாலும் அவனுடைய உயர்ந்த ஆணையைப் பெற்றவராக அவ்வழி சிவபெருமானும் தான் செய்யும் தொழிலை அவரிடத்துப் பொருந்துமாறு செய்வன். சிவபெருமான் ஒருவனே முத்தொழிலையும் அம்மூவர்பாலும் வைத்துச் செய்வன். இத்தொழில்களைச் செய்வதால் எவ்வித வேறுபாடுகளையும் அவன் பொருந்தான். விண்ணில் விளங்கும் கதிரவன் முன்னிலையில் ஒரு தாமரை மலர்வதாய் இருக்கும்; பிறிதொன்று அலர்தற்குரிய நிலையில் அரும்பாய் இருக்கும்: மற்றொன்று உலர்ந்து வாடும். இவ்வாறு அம்மலர்கள் கதிரவன் முன்னிலையில் பல நிலைப்படினும் கதிரவன் எவ்வித வேறுபாடும் அடைவதில்லை. அதைப் போன்றே இறைவன் முன்னிலையில் இவ்வுலகு முத்தொழிற்படினும் இறைவன் அவற்றால் வேறுபடுவதில்லையாம்.

மாலும் அயனும் உருத்திரனும் சிவபெருமான் அருள்வழி நின்றே தத்தம் தொழிலைச் செய்ய வல்லவராவர். 'ஆக்குறும் செயலதொன்றே அயன் தனக்கு ஆக்கலோடு காக்குறும் செயலிரண்டும் கண்ணனுக்கு,ஆக்கல் காத்தல் அழித்தல் இம்மூன்றும் புராந்தகர்க்கு, நீக்கறும் இறைமை நல்கி நிறுவினன் குருகுகேசன்' என்பர் சிவப்பிரகாசரும். படைத்தல் முதலிய முத்தொழில்களும் அசுத்த மாயை, பிரகிருதிமாயை, சுத்தமாயை ஆகிய மூவிடத்தும் நிகழும் என்றும், இவ் விடங்களில் நிகழும் இத்தொழில முறையே அவாந்தர சிருட்டி, மத்திமைசிருட்டி, மகாசிருட்டி என்பர் என்றும், மகா சிருட்டியை இறைவன் தானே செய்தருளுவன் என்றும், அசுத்த மாயையில் நிகழ்வதை அனந்த தேவரை அதிட்டித்துநின்று செய்வன் என்றும், பிரகிருதி மாயையில் படும் முத்தொழிலையும் அவ் வனந்த தேவர் வாயிலாகச் சீகண்ட உருத்திரரை அதிட்டித்து நின்று செய்வன் என்றும் கூறுப;

18. ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட் டாக
இயம்புவர்கள் அணுக்கள்இடர்க் கடல்நின்றும் எடுத்தே

ஊற்றமிக அருள்புரிதல் ஏதுவாக
உரைசெய்வர் ஒடுக்கம்இளைப் பொழித்தல் மற்றை
தோற்றமல பாகம் வரக் காத்தல் போகம்
துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரும் அருள் அருளே அன்றி மற்றுப்
புகன்றவையும் அருளொழியப் புகலொ ணாதே.

(தெ-ரை) இறைவன் ஏன்று கொண்ட இவ் வைந்தொழில்களையும் அவனது அருள் விளையாட்டெனக் கூறுவார்கள். உயிர்களைத் துன்பத்திற்கு ஏதுவாய பிறவிப் பெருங்கடலினின்றும் எடுத்து, நிலைபேறு மிக்க அருளைக் கொடுத்தலே அவ்வைந்தொழிற்கும் காரணம் என்றும் கூறுவர். இவ்வைந் தொழில்களாலும் உயிர்கள் அருள்பெறுதல் எங்ஙனமெனில் அழித்தல், பிறப்பு இறப்பின்பாற் பட்டு வருந்திய உயிர்களுக்கு அவ்விளைப்பை நீக்குதலாம். மற்றைய பிறப்பு, உயிர்களைத் தகைத்து நிற்கும் மலத்தைப்பக்குவம் வரச்செய் தலாம். காத்தல், உயிர்களின் கன்மத்துக்கீடான நுகர்வைச் செய்வ தாம். மறைத்தல், அந்நுகர்வினை நுகருமளவும் அதன்கண் சுவை பிறக்குமாறு நிறுத்தலாம். போற்றுதற்குரிய அருள், அருளேயாம். இவ்வருளன்றி, முற்கூறப் பெற்ற அழித்தல், படைத்தல், காத்தல், மறைத்தல், ஆகிய நான்கும் அவ்விறைவனின் அருட் செயல்களே அன்றி வேறுவகையில் கூறுதற்குரியதன்றாம்.

இறைவன் ஐந்தொழில் இயற்றுதல் விளையாட்டு என்பதன் கருத்து செயற்கரிய அத்தொழிலை மிக எளிதாக நினைவுமாத்திரை யானே அவன் செய்கின்றான் என்பதேயாம். சில மைல் தூரத்தை நண்பர் பலருடன் பேசிக்கொண்டே கடந்தபின் விளையாட்டாகப் பேசிக்கொண்டே வந்தோம் எனக் கூறல் உலகியல்- அதுவன்றிப் பொழுது போக்கிற்காகவோ அன்றி உடல் வளத்துக்காகவோ நாம் மேற்கொள்ளும் விளையாட்டுப் போல்வதன்று. நாம் மேற்கொள்வ தெல்லாம் தன்னலம் கருதியதாம். இறைவன் செய்வதெல்லாம் உயிர்கள் பொருட்டேயாம். 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி', 'ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டில் உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்' என வரும் திருவாக்குகள் இம் மெய்ம்மையை விளக்கும். இடர்க்கடல்- துன்பத்திற்கு ஏதுவாய பிறவிக் கடல். ஊற்றம்- நிலைபேறு. திரோதாயி- மறைத்தல். இறைவனின் ஐந்தொழில்களும் உயிர்களின் பொருட்டேயாம் என்பதும், அவற்றால் அவ்வுயிர்கள் உய்திபெறுமாறு எங்ஙனம் என்பதும் இப்பாடலின் பிற்பகுதி நன்கு விளங்குகிறது.

சொன்னஇத் தொழில்கள் என்ன காரணம் தோற்ற என்னில்
முன்னவன் விளையாட் டென்று மொழிதலும் ஆம்உயிர்க்கு
மன்னிய புத்தி முத்தி வழங்கவும் அருளால் முன்னே
துன்னிய மலங்கள் எல்லாம் துடைப்பதுஞ் சொல்ல லாமே.

அழிப்புஇளைப்பு ஆற்றல் ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம்
கழித்திடல் நுகரச் செய்தல் காப்பது கன்ம வொப்பில்
தெழித்திடல் மலங்கள் எல்லாம் மறைப்பருள் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடின் அருளே எல்லாம்.

எனவரும் சித்தியார்ப் பாடல்களும் ஈண்டு எண்ணத்தக்கனவாம்:

## உயிர் இலக்கணம்

19. எண்ணரிதாய், நித்தமாய், இருள்மலத்தில் அழுந்தி
இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை
அண்ணல்அரு ளால்நண்ணி, அவைஅவரால், அதனல்
அலகில் நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றுல்
புண்ணியபாவம்புரிந்து, போக்குவரவு உடைத்தாய்ப்,
புணருமிருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உள் நிலவும் இருள் அகற்றிப், பாதம்
உற்றிடும்நல பசுவர்க்கம்: என உரைப்பர் உணர்ந்தே.

(தெ-ரை[ நலம் பெறற்கு ஏதுவாய உயிரினம் இத்துணை யென எண்ணி அறிதற்கு அரிதாய், என்றும் நிலைபேறு உடையதாய், ஆணவ மலத்தில் அழுந்தி நல்வினை தீவினை என்னும் இருவினை களுக்குஏற்றஉடலை இறைவனது திருவருளால்பெற்று, அவ்வுடலையே, தாமாகக் கருதி வாழ்ந்த வாழ்வியலால் அளவின்றி மேன்மேல்வரும் நுகர்வுகளை நுகரும் வாயிலாக மீண்டும் புண்ணிய பாவங்களைச் செய்து அவற்றுல் துறக்க நிரயங்களில் போதலும் வருதலும் உடையதாய், பொருந்திய அவ்வாணவ மலம் பக்குவம் அடைந்த காலத்துக் குருவருளின் துணை கொண்டு அறிவில் தோன்றும் ஞான ஒளியால் அம்மல விளைவை நீக்கிச் சிவபரம்பொருளின் திருவடி நிழலை அடையும் எனத் தாம் தெளிந்த உண்மையைத் திருவருள் உணர்வுடையார் கூறுவர்.

முட்டை வியர்வை கரு கிழங்கு ஆகிய நால்வகையானும் எழு வகைப் பிறப்பினை எய்தும் உயிரினங்கள் எண்பத்து நான்கு நூருயிரம் பிறப்பு வேறுபாடு உடையவாம். அவ்வகையில் அப்பிறவி வேறுபாடு டைய உயிர்கள் எண்ணற்றனவாதலின் 'எண்ணரிதாய்' என்ருர்.

'பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும் துறந்தோர் துறப்போர் தொகை' எனத் திருவருட்பயனும், 'துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக் கொண்டற்று' எனத் திருக்குறளும் கூறுமாறு காண்க. உயிர் வினைவயத்தால் எடுக்கும் உடல், தோற்றக் கேடுகளுக்கு இலக்காவதன்றி உயிர் தோற்றக் கேடுகள் உடையதன்று. ஆதலின் 'நித்தமாய்' என்றார். திருவள்ளுவரும் மன்னுயிர் என்றே குறிப்பர். மன்னுயிர் – நிலைபெற்ற உயிர். இருள்மலம்- ஆணவ மலம். திருவருட் பயனில் இருள்மல நிலை என்றே இவ்வாசிரியர் குறித்திருப்பதும் ஈண்டு எண்ணற்குரியதாம். உயிர் செய்த வினைக்கு ஈடாக உடலை வழங்குபவன் இறைவனே யாவன். ஆதலின் 'அண்ணல் அருளால் நண்ணி' என்றார். இருள் மலத்தில் அழுந்தி என்பதன்காறும் கேவல நிலையும், போக்குவரவு உடைத்தாய் என்பதன்காறும் சகலநிலையும், இருளகற்றிப் பாதம் உற்றிடும் என்பதன்காறும் சுத்த நிலையும் கூறப்பெற்றிருத்தல் அறியத்தக்கது. யான் எனது என்னும் செருக்கற்ற நிலையே மலபரிபாகமுற்ற நிலையாம்..

## தனி இலக்கணம்

### மலமும் மறைப்பும்

20. ஏகம்ஆய்த் தம்கால எல்லைகளின் மீளும்
 எண்ணரிய சத்தியதாய் இருள்ஒளிர இருண்ட
மோகமாய்ச் செம்பின்உறு களிம்புஏய்ந்து நித்த
 மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
 பண்ணுதலான் மலமெனவும் பகர்வர் அதுபரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையான் அழகன்
 நணுகும்வகை கருணைமிக நயக்கும் தானே.

(தெ-ரை) ஆணவம் என்பது ஒன்றாய்,தத்தம் பக்குவம் பெற்ற பொழுது விட்டுநீங்கும் எண்ணிறந்த ஆற்றல்களை உடைய தாய், பேரிருளையும் ஒளியென எண்ணுமாறு மிக இருண்ட பேரிருளாய், செம்பில் பொருந்திய களிம்பினை ஒத்து எஞ்ஞான்றும் நிலைபெற்றிருக்கும் மூலமலமாய், உயிரது அறிவினை முழுமையாக விளங்கவொட்டாது மறைத்து நிற்கும். மறைப்பாற்றல் என்பது உயிர்களொடு பொருந்தி நின்று ஆணவ மலம் பக்குவம் அடையுமாறு அதற்கு ஏற்ற வழி வகைகளைச் செய்தலால் மலங்களுள் ஒன்றாகக் கூறுவர்;

ஐம்மலங்களுள் ஒன்றெனக் கருதப்பெறும் அம்மறைப்பாற்றலே, பாம்பையும் பெரிய கங்கையையும் சந்திரனையும் அணிந்த சடையினை யுடைய சிவபெருமானின் திருவடிகளை அடையுமாறு உயிர்கட்கு இரங்கி பேரருளை வழங்கும்.

இப்பாடற்கண் ஆணவம், மறைப்பாற்றல் ஆகிய இருமலங்களின் இயல்பு என் கூறப்படுகிறது. ஆணவம். என்பது ஒருபொருளே: அது பொருந்தியுள்ள உயிரினங்களின் தரத்திற்கும்எண்ணிக்கைக்கும்ஏற்பப் பல்வேறு ஆற்றல்கள் வாய்க்கூறப்படுகின்றது.நெல்லிற்கு உமியும்நிகழ் செம்பில் களிம்பும் சொல்லில் புதிதன்று. அதுபோன்றே உயிரிடத்து ஆணவம் பொருந்தி நிற்பதும் புதிதன்று. ஆதலின் அதனைச் சகசமலம் என்றும் கூறுவர் ஏனைய கன்மமும் மாயையும் விளைதற்கு இது மூல மாய் நிற்றலின் 'மூல மலமாய்' என்றார். திரோதானம்-மறைப்பு, உயிரது அறிவை மறைத்தல் ஒப்புமையான்இதனை மலமெனக் கூறினும் இது ஏனைய மலங்களொடு ஒன்றாகக்கருதுதற்குரியதன்று. ஏனையமலங் கள் உயிர்க்கு எஞ்ஞான்றும் இடர் செய்வன. இதுவோ மலம் பக்குவம் பெறும் வரை மறைத்தலைச் செய்தும் அது பக்குவம் பெற்றபின் இறைவனது திருவடி நிழலில் சேர்த்தும் அருளவல்லது. மறைத்தலைச் செய்தலாவது உயிர் வினைப்பயன் நுகருமளவும் அதனுள் அழுந்து மாறு செய்தலாம். மறைத்தலைச் செய்தலின் ஆணவத்தோடு இது ஒப்புமை உடையதாயினும் ஆணவம் அம் மறைப்பொன்றையே செய்யும். இது மறைப்பையும் கருணையையும் செய்யும். அது பகைப் பொருளாகவே நிற்கும். இது அருட் பொருளாகவே இயங்கும். இவ்வேற்றுமை அறியத்தக்கதாம்.

# திருவிளையாடல் புராணம்

உரைநடை

வினையைவெல்லும் உத்தமராகிய பிரகஸ்பதி, ''இவர் நமது தவத்திற்கு இடையூறு செய்தனரே'' என்று நினைந்து மனம் நொந்து வெகுண்டு நோக்கி ''பெரியோர்களைக் கண்டு வணங்குங் கடப்பாட்டினை மறந்து வேடத் தொழிலை மேற்கொண்டீர்கள்! நீங்கள் நிலத்தினை உழுந் தொழிலையுடையீர்களாதலால் பன்றிக் குட்டிகளாய்ப் பிறந்து, தாய் தந்தையர்களை இழந்து, வருந்தக் கடவீராக'' என்று கடுஞ்சாபமிட்டார்.

உடனே, பாவமே வடிவான அப்பிள்ளைகள் பன்னிருவரும் பயந்து சாபத்தினை ஏற்று, ''இந்தச் சாபம் எப்பொழுது நீங்கும்'' என்று குறையிரந்து வேண்டினர். தேவகுரு, கோபந்தணிந்து உயிர்களுக்கு நேர்ந்த இடையூற்றினை நீக்கும் சிவபெருமானுடைய திருவடிகளை மனத்தில் சிந்தித்து, ''என்னை ஆளாகவுடைய கூடலம்பதியில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளே உங்களுக்குத் தாயாய் வந்து முலைகொடுத்து உங்களைக் காத்துப் பாண்டியனுக்கு மந்திரிகளாகச் செய்தருளி, அதன் பின் முத்தியைத் தந்தருளுவார்'' என்றார்.

### சுகலன் புதல்வர்கள் பன்றிக்குட்டிகளாகப் பிறத்தல்

சுகலன் பிள்ளைகள் பன்னிருவரும், குருவிருந்த துறையின் புறத்திலுள்ள காடுகளில் சஞ்சரிக்கும் பன்றிகளெல்லாவற்றிற்கும் அரசாகிய பன்றியின் பெட்டை வயிற்றிற் போய்க் குட்டிகளாய்ப் பிறந்து இருந்தார்கள்.

### இராசராச பாண்டியன் வேட்டைமேற் செல்லுதல்

சுகலன் பிள்ளைகள் பன்றிக் குட்டிகளாக இருக்கும் நாளிலே, ஒருநாள் இராசராச பாண்டியன் வேட்டையாடுதற் பொருட்டுச் சேனைகள் சூழ யானைமேற் கொண்டு மதுரையினின்று நீங்கி மேற்றிசைக் காட்டிலே சென்றான். விலங்குகள் பயிலும் இடங்களை அறியும் ஒற்றறர்கள் விலங்குகளின் அடிச்வட்டினைப் பின்பற்றிச் சென்று புலால் நாறும் வாயினையும், தீப்போன்ற கண்களையுமுடைய புலிகள், பன்றிகள், திருகிய கொம்புகளைக் கொண்ட கலை மான்கள், மானினங்கள் முதலியன வாழும் இடங்களை அறிந்து மிக விரைந்து வந்து அரசன் எதிரே நின்று புகன்றனர். வேட்டையாடுதலில் வல்லார் முன்னே விரைந்து சென்று, காடுகளை வெட்டிச் சரித்துப் புறம்பே வலைகளைக் கட்டி நாய்களைப் புறத்தே காவலாக வைத்துப்

படைகளை ஏந்திய வீரர்களைப் பக்கங்களில் நிறுத்தி வைத்தனர். பாண்டியனும் யானையின்மேல் ஏறி ஒரு பால் நின்றனன். அப்போது சில்லரி (ஒரு வகைப் பறை), உடுக்கை, கொம்பு முதலியவற்றை எவ்விடத்தும் செவிபடுமாறு ஒலித்தனர். ஆங்காங்கே பல்வகையான [1]பார்வை விலங்குகளை நிறுத்தி, அவ்விலங்குகளின் ஒலிகளைப்போல் ஒலித்து நின்றனர். புலிகளும், மான்களும், யானைகளும் வெருண்டு ஓடுமாறு பாண்டியனும், படைவீரர்களும், கொடிய கணைகளைப் பொழிந்தனர். மான்களில் சில கால் முறிந்து வீழ்ந்தன; சில தலை சிதைந்து சாய்ந்தன; குருதி ஆறாகப் பெருகி ஓடியது.

யானைகள் வெண்ணிணம் வெளிப்படத் துதிக்கைகள் முறிந்து கீழே விழ்ந்து மடிந்தன; கரடிகளும் புலிகளும் வாய்களைப் பிளந்த வண்ணம் வீழ்ந்து மாண்டன. தோண்டிய புல்லின் மணமும் கிழங்கின் மணமும் வீச விரைந்து ஓடிவந்த சில பன்றிகள் வலைகளிலே வீழ்ந்தன. பதுமையாகச் செய்து வைத்த பார்வை விலங்குகளைக் கண்டு நெருங்கி வந்த் சில பன்றிகள் வலைகளிலே அகப்பட்டன. கட்டி வைத்த வலைகளினின்றும் தப்பியோடிய விலங்குகளை வேட்டை நாய்கள் கௌவி நிறுத்தின. அளவிறந்த விலங்குகள் வீரர்களின் வேற்படையால் மாய்ந்தன. வேல்களுக்கு இலக்காகாது பிழைத்து நின்ற கொடிய மிருகங்கள் வளைந்து சூழ்ந்த வலை யினின்றும் தாவி வேட்டுவ மாக்கள் மீது பாய்ந்து மீள்வன. மதிலை முற்றுகையிட்டுப் போரிட வந்த வீரர்களைத் தாக்கும் பொறிகளாகிய விலங்குக் கூட்டங்களை ஒத்தன. வீரர்கள் விட்ட கணைகள் முனிவர் இடுஞ் சாப மொழியினும் விரைந்து சென்று, புலிகளையும், கரடி களையும், மான்களையும், யானைகளையும் துளைத்துச்சென்றன. இவ்வாறு துண்டித்த விலங்குகள் அளவிறந்தன. பாய்ந்த கணைகளினின்றும் தபபி. வலையைக் கிழித்துக்கொண்டு அப்புறம் ஓடிய மான்களைக் கௌவி வருத்தி நின்றனவாகிய நாய்கள்,முன்னுளிலே சூழ்ந்த பாசமாகிய வலையினின்றும் தப்பிப்பிழைத்து செலலும் பெரியோரைச் விரைந்து தடுத்து ஆசையை விளைத்துநின்ற பெண்களை ஒத்தன! சந்திரனை இரு கூறுகப்

1. பார்வை விலங்குகள் - மிருகங்களைப் பிடிப்பதற்கு வளர்க்கப் பட்ட இனமாகிய மிருகங்கள்.

2. இங்கே, ''பலதுறைகளின் வெருவரலொடு பயில்வலையற நுழைமா, உலமொடுபடர் வனதகையுற வுறுசினமொடு கவர்நாய், நிலவிய இரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர், புலனுறுமன விடைதடைசெய்த பொறிகளினை வளவே'' என வரும் (பெரிய புராணம்-கண்ணப்ப நாயனர் புராணம்) செய்யுள் ஒப்பு நோக்கற் பாலது.

பிளந்து கௌவினுற்போன்ற வெள்ளிய கொம்புகளை உடைய யானை யின்மேல் விடம் பூசிய வேற்படை ஊடுருவியதாலாகிய செம் புண்ணின் தொளையினின்று பெருக்கெடுக்கும்குருதி நீர், காடுகள், அடர்ந்த மலையின்மீது சூழ்ந்த நெருப்பினை ஒத்தது. வீரர்களின் ஆர்ப்பொலியும், உடுக்கையின் ஒலியும், ஊது கொம்பின் ஒலியும், அம்புகளால் தாக்கப்பட்டு வீழ்கின்ற விலங்குகளின் ஒலியும், வலை களின்றும் தப்பியோடும் மான்களின்மேல் பாய்கின்ற நாய்கள் குரைக் கின்ற ஒலியும் ஒன்று சேர்ந்து இடியின் ஓசையை ஒத்திருந்தன.

அரசப் பன்றி போருக்குப் புறப்படல்.

இவ்வாறு பல்வேறு வகையான விலங்குகளையெல்லாம் வேட்டையாடிய வண்ணம் இராசராச பாண்டியன் மேற்றிசை நோக்கிச் செல்லும்போது ஒரு பன்றி, பன்றியரசன் இருக்கும் காட்டின்கண் முன்னர் ஓடிவந்து நின்று ''எங்கள் அரசே! இங்குள்ள விலங்குகள் அனைத்தையும் பாண்டியன் கொன்று வருகிருன்'' என்று சொல்லிற்று. அரசப் பன்றி அது கேட்டுப் பெருங் களிப்படைந்து போர்புரிய எண்ணி எழுந்து செல்லும்போது தன் உயிர்போன்ற பெண்பன்றியை நோக்கி, ''நான் இன்று பாண்டியனை எதிர்த்துப் போர்புரிந்து வென்று வெற்றி மாலையுடன் வருவேனே, அல்லது இறந்து படுவேனே, அறியேன்; நீ உன் புதல்வர்களை நன்கு பாது காத்துக்கொண்டு இங்கே இருப்பாயாக'' என்று கூறியது. அதற்குப் பெண்பன்றி, ''என் பிராண நாயகனே! உயிர் அங்குச் செல்ல, இந்த உடல் இங்குத் தனித்திருப்பது வழக்காமோ? முன்னாளில் இக் குட்டிகளை வகுத்த தெய்வம் இப்பாவியோ? அது வேறு; ஆதலின் யானும் வந்து, நீ பெருஞ் சமர் புரிந்து வெற்றி பெற்று வருவாயேல் உடன் மீளுவேன்; அல்லாமல் நீ இறந்து படுவாயேல் அங்கேயே யானும் இறந்தொழிவேன்; உடம்பின் நிழலுக்கு அவ் வுடம்பைத் தொடர்ந்து செல்வதன்றி வேறு செயலும் உளதோ? ஆகலின், செல்வோம் எழுக'' என்று கூறி விரைந்து எழுந்தது; பிறகு பெண் பன்றி தனது மருங்கில் தழுவி வாராநின்ற குட்டிகளைத் தள்ளிவிட்டு நிழல் போல் தன் கணவனைப் பின்பற்றி அணைந்து செல்ல அரசப் பன்றி காற்றெனக் கடிது சென்றது. பல்வகைச் சாதியான பன்றிக் கூட்டங்கள் எல்லாம் படை வீரராய் முன்னே செல்ல, அரசப் பன்றி இடிபோல ஒலித்துக் கண்களினின்றுஞ் சினத்தீ சிந்த மானம் என்கிற குதிரைமேலேறிப் போருக்கு எழுந்தது.

பன்றி வீரர்களின் பெரும் போர்

முன்னணியாக நடக்கின்ற பன்றியாகிய வலி மிக்க படை எதிரே வருகின்ற பாண்டியனுடைய வீரர்கள்மீது சீறிச் செல்ல அவ் வீரர்கள்

பின்னே ஒதுங்கி நின்று கணைகளை மழைபோல் சொரிந்தனர்: இரத்தம் வெள்ளமாகப் பெருகிற்று; பன்றிகளின் உடல்கள் கீழே விழ்ந்தன; குடர்கள் சரிந்தன; எலும்புகள் முறிந்தன; மூளைகள் சிதறின; பருந்துகளும் காகங்களும் பறந்தன. பன்றிகள் இங்ஙனம் உயிர் வேறு உடல் வேறாகப் பிரிந்தன.

பன்றி வீரர்கள் உடல் பதைத்து, அனல்போல் சினந்து, பாண்டியன் படைவீரர்மேல் பாய்ந்து சிலரை அழித்தனர்; சிலரைக் கீழே தள்ளி வாயினின்றும் இரத்தம் பெருக உதைத்தனர்; சிலரை விழ்த்தி அவர் மார்புகளில் தம் கொம்பினை அழுத்திக் கொன்றனர்; சிலர் உடலைக் கிழித்தனர்; பாண்டி மன்னனின் படைவீரர்களின் சிலர் கால் முறிந்தனர்; சிலர் தலையுடைந்தனர்; சிலர் தோள் சிதைந்தனர். சிலர் தொடை நொறுங்கினர்; சிலர் வாட் படை அற்றனர்; சிலர் விதித்த வாழ்நாளைப் போக்கினர். இந்நிலையினைக் கண்ட பாண்டியனுடைய மந்திரிகள் கோபங்கொண்டு கூற்றுவனைப் போல இருப்புலக்கைகளையும் சக்கரங்களையும் வீசி ஆரவாரித்தனர்; அதனால் பன்றி வீரர்கள் பலர் உயிர் இழந்தனர்.

பன்றியரசு தன் பெட்டையிடம் வீரமொழி பேசல்

அப்பொழுது பன்றியரசை அதன் பக்கத்து நின்ற பெண் பன்றி பார்த்து, ''நாம் ஏவிய சேனைகளெல்லாம் இறந்தன. இனி நாம் செய்யக் கடவது என்னை? நாமும் இங்கே வீணாக உயிர்விட வேண்டுவதில்லை; உயிர் தப்பிப் போவதே நமக்குரிய செயலாகும்'' என்று கூறியது. அதற்குப் பன்றி வேந்தன், ''நுண்ணறி வுடையராகி நூலொடு பழகினாலும், பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத்தே'' ஆதலால் உன்னறிவுக்கேற்ற காரியஞ் சொன்னாய்; இஃது அறிவுடையோருக்கெல்லாம் இழுக்குடைய தன்றோ! இரண்டு சிங்கங்கள் நிற்கின்ற நீர்த்துறையிலே ஒரு பன்றி வந்து அஞ்சாமல் தண்ணீர் குடித்துவிட்டுத் திரும்பிச் செல்லும்; ஆனால் ஒரு பன்றி நிற்கிற நீர்த்துறையில் இரண்டு சிங்கங்கள் வந்து தண்ணீர் குடித்தற்கு அஞ்சும். நான் அத்தகைய வீரம் வாய்ந்த குடியில் மேலைத் தவத்தால் வந்து பிறந்துள்ளேன்; ஆதலால் பாண்டியனுடைய வீரத்தைக் கொள்ளைகொண்டு என் புகழை எட்டுத் திசைகளிலும், விண்ணுலகத்திலும் நாட்டுவேன்; அல்லது புறங்காட்டி ஓடாது போர்க்களத்தில் இறப்பேன்; இப்பூதவுடம்பு அழிவதே அன்றிப் புகழுடம்பு அழிவதில்லை; ஆகவே, அஞ்சுகின்ற நீ இங்கே நிற்பாயாக'' என்று கூறித் தன் பெட்டையை நிறுத்திவிட்டுத் தான் மட்டும் தனித்துச் சென்றது; அப்போது, ''பாண்டி

யனே! என் காட்டில் வாழ்ந்த பன்றிக் கூட்டங்கள் முழுதையும் கொன்றுவிட்டோம் என்று மகிழ்ந்து இனி ஓடாதே; நில்'' என்று ஆரவாரித்து வெகுண்டு நிலத்தைக் கீறிப் பாதலத்தைக் காட்டித் துகள் விண்ணினை மறைக்க எழுப்பி நிமிர்ந்து சென்றது.

பன்றியரசன் போர் புரிந்து வீர சுவர்க்கம் அடைதல்

பன்றியரசனின் வருகையைப் பாண்டியன் கண்டு அதன் வீரத் தைப் புகழ்ந்து பாராட்டி, வில்லைவளைத்துக் கணைகளைச் சொரிந்தான்: பன்றியரசு பாண்டியன் விட்ட கணைகளில் சிலவற்றைப் பிடுங்கிப் பசிய புல்லைப்போல வாயாலே கடித்தது; சிலவற்றைக் கால்களால் தேய்த்துத்தேய்த்து முறித்தது; சிலவற்றை வாலினால் முறித்தது: அதனைக் கண்ட இராசராச பாண்டியன் மானம் பொறாது, தன் யானையின் கையில் ஓரிருப் புலக்கையைக் கொடுத்து ஏறிச் செலுத்தி னான் அப்போது பன்றியரசு பொறுக்கலாற்றாது இடிபோல ஆரவாரித்து எழுந்து, ''இவ்யானையைக் கொல்லுவேன்'' என்று சினந்து பாய்ந்து துதிக்கையினைத் துணித்துத் தன் வளைந்த கொம்பால் உடலைச் சிதைத்துக் கொன்றது. உடனே பாண்டியன் தேர் மீது பாய்ந்து சக்கரத்தைச் சுழற்றி விட்டான். பன்றி அரசு அதனைத் தடுத்துக் கடிய காற்றைப்போல் விரைந்து பாய்ந்து அத் தேர் சிதையும்படி உடைத் தது. உடனே பாண்டியன், குதிரைமேல் பாய்ந்து விஷம் பூசிய வேற் படையை வலமாகச் சுழற்றினான். அவன் அதை விடுக்கு முன் அஞ் சாமல் நின்ற அப் பன்றி அக் குதிரையின் பின் சென்று தாக்கிக் குடரும் குருதியும் சோரக் கொம்பினால் குத்தி அதனைக் கொன்றது: பாண்டியன் கோபம் மிகுந்து நிலத்தின்மீது குதித்து இருப்புத் தண்டத் தால் பன்றியரசனின் தலையிலே அடித்தான். உடனே பன்றியரசு இரத்த வெள்ளம் பெருக உயிரை விடுத்து விமானமீது ஏறி விண்ணுல கடைந்தது. அப்போது அது மன்மதனைப் போன்று விளங்கித் தேவர் கள் வியந்து பொழிந்த பூமழையாகிய மழையில் நனைந்து, தேவ இசையாகிய அமுதினை இரு செவிகளாலும் பருகி மகிழ்ந்து வீர சுவர்க்கத்துள்ள தேவ அமுதினை உண்டு அர மகளிரைத் தழுவியது.

பெட்டைப் பன்றி உயிர் விடுதல்

பின்பு துணையாக நின்ற பெண் பன்றி, ''என் துணைவன் இறப்ப நான் உயிருடன் வாழ்வது கற்பு நெறியாமோ? நான் போர் செய்யின் வெல்லேனாயினும் என் துணைவனோடு விண்ணுலகை அடைவேன்'' என்று நினைந்து பாண்டியனை எதிர்த்தது. ''பெட்டையை எதிர்த்துப்

போரிட்டுக் கொல்வது அரசருக்கு அறம் அன்று'' என்று கருதிய பாண்டியனுடைய வேட வீரர்களுக்குத் தலைவனாகிய சருச்சரன் என்பவன் அப் பெண் பன்றியை எதிர்த்து நெடுநேரம் போர்புரிந்தான். நஞ்சினும் முதிர்ந்த கோபங் கொண்ட அப் பெண்பன்றி அச் சருச்சரனைத் தரையில் வீழ்த்த, அவன் வலிமை குறைந்து செயலழிந்து மெல்ல எழுந்து ஒரு இருப்புத் தண்டத்தை எடுத்து விரைந்து ஓங்கிப் பெண் பன்றியின் தலையில் அடித்துவிட்டு விழுந்திறந்து வீர சுவர்க்கம் அடைந்தான். பெண் பன்றியும் இறந்து வீரசுவர்க்கம் அடைந்தது. இராசராச பாண்டியனும் மதுரையை அடைந்தான்;

பன்றி மலை

பின்னர், பன்றிகள் வீழ்ந்து இறந்த இடம் மலையாகியது. அன்று முதல் இன்றுவரை அம்மலை பன்றி மலை என வழங்குகின்றது. அப் பன்றி மலையில் அரிய தவம் புரியும் முனிவர், விஞ்சையர், சித்தர், யோகிகள் முதலியோர் முத்தி பெறற் பொருட்டுத் தவம் புரிந்துவருகின்றனர்.

பன்றி அரசனின் முன்பிறப்பு

இவ்வாறு கூறியருளிய அகத்திய முனிவரைப் பிற முனிவர்கள் நோக்கி, ''அறிவில்லாத பன்றியின் வடிவமாகிய மலையின் மீது முனிவர், விஞ்சையர் முதலியோர் தவம் புரியக் காரணம் யாது?'' என்று வினவினர். அதற்கு அகத்திய முனிவர், ''மன்மதனைப்போலப் பேரழகு கொண்டு விளங்கிய ரங்கவித்தியாதரன் என்னும் ஒரு இயக்கன், புலத்திய முனிவரின் தவத்திற்கு இடையூறு உண்டாகும் படி இசைப் பாட்டினைப் பாடினான். அப்போது புலத்தியர் சினந்து அவனைப் பன்றியாம் வண்ணம் சபித்தனர். அங்ஙனம் பன்றி வடிவாகும் வித்தியாதரன், 'அடியேனுக்கு இச் சாபம் நீங்குவது எப்போது?' என்று வேண்டினான். புலத்திய முனிவர், 'இராசராச பாண்டியன் ஒரு காலத்தில் நின் காட்டில் வந்து பலவகை விலங்குகளையெல்லாம் மாய்த்து உன்னையும் கொல்லுவான்; பின்பு நீ உன் பழைய வடிவத்தைப் பெறுவாய்' என்று அருளிச் செய்தார். அவ்வாறே வித்தியாதரன் பன்றியாக வந்து இறந்து பின் பழைய வடிவத்தைப் பெற்றனன். இவ்வாறு புண்ணிய உருவத்தையுடைய இயக்கனின் உடலாகக் கிடந்த தூய தன்மை பொருந்திய அம்மலை பெருமை மிகுந்ததாகும். அதனால் அம் மலையின்மேல் சிறந்த முனிவர் முதலியோர் தங்கித் தவம் புரிந்தனர். சோமசுந்தரக் கடவுளும் அங்கே எழுந்தருளியிருப்பர்'' என்று விடை கூறியருளினர்.

கூடற்பெருமான் பன்றியாக வடிவுகொண்டு வருதல்

பன்றியரசும், பெட்டையும் பசிய காட்டின்கண் விட்டுப் போய் இறந்த பின்னர், பன்றிக்குட்டிகள் பன்னிரண்டும் திகைத்துத் தாய் தந்தையைத் தேடி ஓடின; காணுமையால் சுழன்றன; நிழலைத் தேடி அலைந்தன; தாயின் முலைப் பாலை விரும்பி வாடின; தாகமும் பசியும் வருத்தச் சோர்ந்தன; வெய்யிலின் கொடுமை தாங்காது வெதும்பி வருந்தின. இவ்வாறு பன்றிக் குட்டிகள் வருந்தும்பொழுது சோம சுந்தரக் கடவுள் மீனுட்சியம்மையோடு விமானத்தின்மேற்கொண்டு அக் காட்டின்கண் தமதிச்சையினுல் திருவிளையாடல் கொண்டிருந் தார். அந்நிலையிலே அவர் பன்றிக்குட்டிகளின் துன்ப நோய்க்கு இரங்கி விருப்பத்துடன் துயரகற்ற அவற்றின் தாய்ப் பன்றியின் வடிவங்கொண்டு காட்டின்கண் பசியால் வருந்தி நின்ற குட்டிகளின் முன் சென்றருளினுர்.

இறைவன் பன்றிக்குட்டிகளுக்குப் பால் கொடுத்தல்

அங்ஙனம் நெருங்கி வருகின்ற தங்கள் தாயின் எதிரிலே பன்றிக் குட்டிகளும் விரைந்து ஓடிவந்து முட்டின; மோந்து பார்த்தன; முதுகிலே தாவி எட்டின; காலை விசைத்துப் பின் எறிந்து நிலத்தை வலிந்து வெட்டின; குதித்தன: விரைந்து ஓடின; மீண்டன. திரு மாலாகிய பன்றியால் இன்னமும் காண்டற்கு அரிதாகிய பன்றி, மெய் சிலிர்க்கக் குட்டிகளைத் தழுவி மோந்தது. கருணைப் பெருக்கால் சுரந்த முலைப்பாலினை ஊட்டியது[1]; மிக்க வலியும் சிறந்த வெற்றியும் ஞானமும் பெருந்தகைமையும் பிற நற்குணங்களும் உண்டாகும் வண்ணம் அருள்புரிந்தது; பின்னர் அக் குட்டிகளுக்கு முகம் ஒன்றை மட்டும் பன்றி முகமாகவைத்து மற்றைய உறுப்புக்களனைத்தையும் மக்கள் உடலிலுள்ள உறுப்புக்களாக நல்கியது. இவ்வாறு செய் தருளிய சோமசுந்தரக் கடவுள் தாமெடுத்த பன்றி உருவத்தை விடுத்து மறைந்தருளினுர்.

---

1. சோமசுந்தரக்கடவுள் பன்றிக்குட்டிகளுக்குத் தாயாகிப் பாலளித்ததிருவுருவம் மதுரைப் புதுமண்டபத்திலும், திருப்பரங் குன்றத்துத்துஸ்துவஜதம்ப மண்டபத்திலும் அமைக்கப்பெற்றுள்ளது.

'இவ்வுலகில் இறைவர் தாய்ப் பன்றியாகவந்து முலைகொடுத்து அறிவில்லாத பன்றிக் குட்டிகளை அறிவுடைய மக்களாகச் செய்து மேல் வரும் பிறவியையும் தூய்மையாக்கினர். [2]எவ்வுலகத்திலும் எவ்வுயிர்க்கும் தாயும் தந்தையுமாகி நின்று காப்பவர் இறைவரே அல்லாமல் வேறு யாவர்? ஒருவரும் இல்லை.

இம்மை இப்பவத்(து)அன்னையாய் இனிவரு பவமுஞ்
செம்மைசெய்(து)அசே தனத்தையுஞ் சேதனஞ் செய்தார்;
எம்மை யெப்பவத் தாயினும் எனைப்பல உயிர்க்கும்
அம்மை யப்பராய்க் காப்பவர் அவரலால் எவரே?

செய்யுள்—63
ஆகச் செய்யுள்—2255

---

1. இங்கே, ''ஏனக் குருளைக்கு அருளினை போற்றி''(திருவாசகம் போற்றியகவல்) எனவும், ''ஏவுண்ட பன்றிக் கிரங்கி ஈசன் எந்தை பெருந்துறை யாதி யன்று, கேவலங் கேழலாய்ப் பால் கொடுத்த கிடப்பறி வாரெம் பிரானு வாரே'' (திருவாசகம் திருவார்த்தை) எனவும், ''தாயாய் முலையைத் தருவானே'' (திருவாசகம் ஆனந்த மாலை)எனவும் வரும் அடிகள் உன்னற்பாலன.

2. இங்கே, ''எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க் கிங்கேஎன் றருள்புரியும் எம்பெருமான்'' என வரும் திருஞான சம்பந்தர் தேவார அடிகள் கருதற்பாலன.

# "ஸ்ரீ குமரகுருபரர்"

## சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100—00 |
| .. | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) | ரூ. | 7—50 |
| .. | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10—00 |
| | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின் பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள் பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

---

## ஸ்ரீ காசிமடத்தின் புதிய வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | .. | விலை ரூ. | 1—50 |
| உண்மை நெறி விளக்கம் | .. | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | .. | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | .. | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | .. | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் விருவெண்பாவும் | .. | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | .. | விலை ரூ. | 1—25 |
| இருபா இருபஃது | .. | விலை ரூ. | 1—25 |
| போற்றிப் பஃறொடை | .. | விலை ரூ. | 1—20 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு (கோ. வன்மீகநாதன்) | | விலை ரூ. | 15—00 |
| திருவருட்பயன் - நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன் | | விலை ரூ. | 5—00 |
| அபிராமி அந்தாதி தெளிவுரையுடன் | | விலை ரூ. | 1—00 |
| திருவிளையாடற்புராணம் உரைநடை(மதுரைக் காண்டம் மட்டும்) | | விலை ரூ. | 4—00 |

விற்பனையாளர்கள் அன்பர்கட்கு 20% கழிவு உண்டு.

ரூ 1000 க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச்செலவு இலவசம்

முகவரி :- நிர்வாக ஆசிரியர், "ஸ்ரீ குமரகுருபரர்"
ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் 612504
(தஞ்சை மாவட்டம்)

ஸ்ரீ குமரகுருபரர் பதிவு எண் T. N. / KMB. / 12



ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - Pin 612 504